# கல்கி

## ராஜாஜி மலர்

## பொருளடக்கம்



சௌமிய, கார்த். 22 - 1969, டிசம்பர் 7



அட்டைப்படம் : கே. விசுவநாதன்.


வாருங்கள் டி.டி.கே! மணி மகுடத்தின் மணிகள் முட்களாக மாறுகின்றன. இதை நான் அணிவதற்கு உதவி புரியுங்கள்.
SAMAY


அதிகாரத்தை
எப்படி?
PK


காந்தீயக் கொள்கை -கள்
WPB



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 □ இதழ் 19

# மூன்று ஜயந்திகளின் முடிமணி

இவ்வருடம் மூன்று மகா புருஷர்களின் ஜயந்தித் திருநாட்களை விசேஷமாகக் கொண்டாடுகிறோம். திருவள்ளுவரின் இரண்டாயிரமாவது ஜயந்தியையும், காந்தியடிகளின் நூறாவது ஜயந்தியையும், குருநானக்கின் ஐந்நூறாவது ஜயந்தியையும் கொண்டாடுகிறோம். இப்போது அம்மூவரும் ஒரு மூர்த்தியாக முறுகி வந்தாற் போன்ற ராஜாஜியின் தொண்ணூற்றிரண்டாவது ஜயந்திக்கு விழா எடுக்கிறோம். அந்த மூன்று ஜயந்திகளும் இன்றுதான் நிறைவு பெறுவதாகத் தோன்றுகிறது. குறளின் குடியிருப்பாகவும், காந்தீயத்தின் காவலராகவும், நானக் வகுத்த பக்தி வழியின் பெட்டகமாகவும் திகழ்கிறார் ராஜாஜி.

சான்றோருக்குக் குறள் கூறிய இலக்கணம் அனைத்தும் அப்படியே இறுகி ராஜாஜியாகி விட்டதோ என்று வியக்கிறோம். அன்பு, நாணம், உலகை ஒட்டி உபகரித்து வாழும் ஒப்புரவு, பரிவான பார்வை, சத்தியம் ஆகிய ஐந்து தூண்களுமே சால்பு எனும் மாளிகையைத் தாங்கி உள்ளன என்கிறார் தெய்வப் புலவர்.

**அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையொடு**
**ஐந்து சால்பு ஊன்றிய தூண்**

இந்த ஐம்பெரும் குண நலன்களை ராஜாஜியிடமின்றி வேறு எவரிடம் பரிபூரணமாகக் காண இயலும்?

இவற்றில் நாணத்தைச் சொல்லியிருப்பது ராஜாஜி ஒருவருக்கே விசேஷமாகப் பொருந்தும். அவர் அன்பு நிறைந்தவர்; ஆனால் அன்பைப் பகிரங்கப்படுத்துவதற்கு நாணுபவர். பிறிதோரிடத்திலும் பெரியோரின் குண விசேஷங்களைக் குறிப்பிடுகையில் ராஜாஜிக்கே சொல்வதுபோல் 'ஒழுக்கமும் வாய்மையும் நாணும்' என்கிறார் குறளாசிரியர்.

அறிவு மட்டும் தனித்திருந்தால் பயன் இல்லை. மக்கட் பண்பு இல்லாதவர் அரம்போல் கூரிய அறிவு பெற்றிருப்பினும் மரம் போன்றவரே என்கிறார் திருவள்ளுவர். அதே போல் அன்பு மட்டும் இருந்து, அதைச் செயலாக்கும் அறிவாற்றல் இல்லாவிடினும் பயன் இல்லை. அன்பு வேண்டும், அறிவு வேண்டும், உள்ளத்தில் தெளிவு வேண்டும், சுயப்பற்று அற்ற வைராக்கியம் வேண்டும் என்று விதிக்கிறது தமிழ்மறை. 'அன்பு அறிவு தேற்றம் அவாவின்மை' என்ற குறள் வாக்கின் மறு வடிவமே ராஜாஜி.

அன்பு, அறிவு இரண்டுக்கும் பொருள் தருவது அற உணர்வு. ராஜாஜி தரும மூர்த்தியே ஆவார். 'அறன் அறிந்து மூத்த அறிவுடையார்' என்ற தமிழ் வேத மந்திரத்தின் அவதாரமாக விளங்குகிறார்.

எக்காலத்திலும் தளரா ஊக்கம், இடுக்கண்களைச் சிரித்தே அழிக்கும் உறுதி ஆகியவற்றைப் போற்றும் குறட்பாக்களின் உரையாக வாழ்பவர் ராஜாஜி. 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்று வள்ளுவர் கூறியதுபோல், சிந்திப்பதெல்லாம் மகோந்நதமான சிந்திப்பாக உள்ளவர் ராஜாஜி.

ராஜாஜியின் ஒரு தனிச் சிறப்பை இவ்வருடம் நூற்றாண்டு விழாவுக்குப் பாத்திரரான ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரியார் சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன்னரே திருநெல்வேலி மகாநாட்டில் எடுத்தியம்பினார். ''மற்றவர்கள் தடபுடலாகப் பேசுவது எல்லாம் தொண்டைக்குச் சேதம்தான். ஆனால் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்தான் வாயால் எதைச் சொல்கிறாரோ அதைச் செய்கையிலும் அப்படியே காட்டுகிறார்'' என்றார் சாஸ்திரியார்.

**'சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்**
**சொல்லிய வண்ணம் செயல்'**

என்று குறள் கூறும் அரிய புருஷர்களின் வரிசையில் இருப்பவர் ராஜாஜி.

குறள் ராஜாஜியை நமக்குப் படம் பிடித்து காட்டுவது மட்டுமின்றி, அவரால் தேசம் அடைய வேண்டிய பயனையும் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே

வற்புறுத்தி விட்டது! குறளை எடுத்துரைக்கும் பெரியோரின் யோசனைக்குச் செவிசாய்க்க வேண்டியது அரசின் தலையாய கடமை என்பதைப் 'பெரியோரைத் துணைக் கோடல்' என்ற தலைப்பில் உள்ள குறட்பாக்களில் தெளிவாகக் காண்கிறோமல்லவா?

**அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்**
**பேணித் தமராக் கொளல்**

என்று பொய்யாமொழி கூறும் அரிய பாக்கியம் நம் மக்களுக்கு, நம் அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ளது. பாக்கியத்தைப் பயனுக்கிக் கொள்வது நம் அறிவைப் பொறுத்தது!

**கா**ந்தி மகானுக்கும் ராஜாஜிக்குமிடையே உள்ள ஒப்புமைபற்றி நாம் சொல்ல வேண்டியதே யில்லை. 'ராஜாஜியை விடுத்து காந்திஜியைப் பற்றி என்னால் நினைக்கவும் முடியவில்லை' என்று அண்ணலின் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்த ஸ்ரீ பியாரேலால் இவ்விதழில் கூறியிருப்பதே போதும்!

காந்திஜியின் தனிப்பட்ட பெருமை யாதெனில் அவர் அரசியலிலும் ஆன்மிகத்தை ஊறச் செய்ததுதான். "மெய்ஞ்ஞானத் துணிவினை.... அரசியலதனில் பிணைத்திடத் துணிந்தனை, பெருமான்" என்று இதற்காக அன்றே அண்ணலைப் போற்றினார் பாரதியார். இன்று மெய்ஞ்ஞானத்தை அரசியலோடு இழைக்கும் ரசவாதத்தைப் புரியும் பெருமானாக விளங்குபவர் ராஜாஜி ஒருவர்தாம்!

**உ**லகைத் துறந்து சந்நியாசியாகச் செல்வதை விட உலகுக்காக உழைப்பதே உயர்ந்தது என்ற குரு நானக்கின் சித்தாந்தத்துக்குத் திருஷ்டாந்தமாகத் திகழ்பவர் ராஜாஜி.

குருநானக் கர்த்தார்பூரில் உழவுத் தொழில் செய்து குடும்பம் நடத்தினார். "இந்த உழவு மட்டுமா? இன்னொர் உழவும் செய்கிறேன்" என்று அவர் கூறினார். அந்த இன்னோர் உழவை இன்று ராஜாஜியும் செய்கிறார். மக்களது இதயமாகிய வயலை உழுது, அன்பு எனும் நீர் பாய்ச்சி, இறைவனின் நினைவு என்ற வித்தினை விதைக்கும் விவசாயமே அது. கப்பல் எத்திசை திரும்பினாலும் காந்த ஊசி வடதிசை ஒன்றையே காட்டுவதுபோல் ராஜாஜி எச்செயலில் ஈடுபட்டிருப்பினும் அவரது அகம் அனவரதமும் ஆண்டவனின் புறமே திரும்பியுள்ளது.

இன்று மாறியுள்ள அரசியல் சூழ்நிலையால் மக்கள் புது விழிப்புப் பெற்று ராஜாஜியின் ராஜீயப் பணியை நிறைவேற்றி விட்டால் பின்னர் இதைக் காட்டிலும் உயர்ந்த அவரது ஆன்மிகப் பணி மேலும் சிறப்பாகப் பொலியும். ரிஷி சிரேஷ்டரின் அந்த உயர் பணிக்கு வழி கோலுவதே அவருக்கு நாம் அளிக்கக் கூடிய ஜயந்திக் காணிக்கை.

# என்ன சேதி?

## பின்னி அய்யரின் மறைவு

**செ**ன்னை மாநகர சுதந்திரக் கட்சிக்கு ஒரு பெருநஷ்டம் விளைந்திருக்கிறது. பின்னி சுப்பிரமணிய அய்யர் என்று நண்பர்களால் அன்புடன் அழைக்கப்படும் நண்பர் சென்ற வாரம் காலமானார். அந்தரங்க சுத்தமாகச் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளிலும் ராஜாஜியிடமும் அபார நம்பிக்கை கொண்டு வேலை செய்தவர் அவர். சுதந்திரக் கட்சிக் கொள்கைகளைப் பொதுமக்களிடம் அநாயாசமாக விளக்கி ஆயிரக்கணக்கில் அங்கத்தினர்களையும் அநுதாபிகளையும் சேர்த்தார். சென்னை நகர சுதந்திரக் கட்சியார் அதிகமான நபர்களை அங்கத்தினர்களாகச் சேர்க்கிறவர்களுக்குப் பரிசு வழங்கத் திட்டமிட்டபோது ஒவ்வோர் ஆண்டும் இந்த அறுபது வயது இளைஞர் பின்னி சுப்பிரமணிய அய்யரே முதற் பரிசு பெற்று வந்தார். சென்னை மேற்கு மாம்பலத்தைச் சுதந்திரக் கட்சியின் கோட்டை என்பார்கள். அதற்கு மூலாதாரமாக இருந்த அய்யர் அவர்களின் மறைவு ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும். அவருடைய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் நமது அநுதாபங்கள்.

## சீனாவின் முன்னேற்றம்!

**டோ**க்கியோவிலிருந்து கவையான செய்தி ஒன்று வந்திருக்கிறது. நமது பொருளாதார நிபுணர்களின் கவனத்துக்கு அது உரியது. இச்செய்தியின்படி சீன மக்கள் கடும் உழைப்பாளிகள்; அதுதான் அவர்கள் அடைந்துள்ள வெற்றியின் ரகசியம். யாராவது ஒருவர் அளிக்கும் ஊக்கத்தின் விளைவாக நம் தேச மக்களும் உழைப்பினால் உயர்ந்து, சீனரைப் போல் உண்மை உணர்வுடன் பணியாற்ற மாட்டார்களா என்ற ஆவல் மனத்தில் எழும்பத்தான் செய்கிறது.

சீன சர்க்கார், தான் தனிச் சிறப்புடன் இயங்குவதாகக் கூறிக் கொள்கிறது. அது உள் நாட்டிலோ அயல் நாடுகளிலோ யாருக்கும் கடன் பட்டிருக்கவில்லையாம். 1968ம் ஆண்டு இறுதிக்குள் எல்லாக் கடன்களும் தீர்ந்து போய்விட்டன என்று சீனக் கம்யூனிஸ்ட் கட்சி உப தலைவர் கூறியுள்ளார்.

சீனக் கம்யூனிஸ்ட் சர்க்கார் தன் வரவு—செலவுத் திட்டத்தை எப்படிச் சரிக்கட்டுகிறது என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

அந்நிய உதவியை, குறிப்பாக ரஷ்ய உதவியைக் கொண்டு சீனாவின் பொருளாதார வளர்ச்சியை உருவாக்க வேண்டும் என்பது சமீபத்தில் பதவி இழந்த ஜனாதிபதி லியு—ஷா—சி என்பவரின் கனவு. சீன வெற்றிக்கு அடிப்படையான இப்போதைய கோட்பாடு அதற்கு அடியோடு மாறுபட்டது என்று டோக்கியோ செய்தி கூறுகிறது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

முன்பு நாம் சக்திவாய்ந்த உண்மையான ஒரு ஜனநாயக முன்னணியை அமைப்பதற்கான பல நல்ல வாய்ப்புக்களை இழந்து விட்டோம். அந்த வாய்ப்பு இந்த 1969-ம் ஆண்டில் மீண்டும் கிட்டியிருக்கிறது. இதை யாவது நழுவ விடாமல் இருப்போமாக. இதில், பார்லிமெண்டிலுள்ள சுதந்திரக் கட்சித் தலைவர்களுக்குப் பெரிய பொறுப்பு உண்டு. அவர்கள் பெருமுயற்சி செய்ய வேண்டும்.

ஜனநாயக அணியில் சேருவதால் எந்தக் கட்சிக்கும் நஷ்டம் ஏதுமில்லை. இதனால் தேசத்துக்கு நல்ல முறையில் சேவை புரிவதற்கான வசதி கிடைக்கும். பிரதம மந்திரியும் அவரது கோஷ்டியினரும் விரும்புவது அரசுடைமை ஆதிக்கமும், சர்வாதிகாரமுந்தான். அவற்றை எதிர்ப்பதன் மூலம் இந்த அணி நாட்டுக்கு நல்ல சேவை செய்யக்கூடும். சுதந்திரத்தை இழப்பது சோஷலிஸம் ஆகி விடாது. பார்லிமெண்டிலுள்ள எல்லா ஜனநாயகவாதிகளுக்கும் 1969 ஒரு மகத்தான வாய்ப்பை அளித்திருக்கிறது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமற் போனால் அது மிகவும் வருந்தத் தக்கது. எதிர்க் கட்சிகள் ஒவ்வொன்றும் தனது தனித் தோற்றத்தில் மிகுதியான பற்றுதல் கொண்டு தவறான வழியில் செல்லக்கூடாது. இங்கிதமறிந்து, செய்ய வேண்டிய பணிகளை வரிசைக்கிரமப்படுத்திக் கொண்டு உழைக்க வேண்டும்.

★

இந்திய சர்க்காரின் சார்பில் சர்தார் வல்லபபாய் பட்டேல் இந்திய சம்ஸ்தானங்களின் அதிபர்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டார். அந்த உடன்படிக்கையை மீறி ராஜ மானியத்தை ரத்து செய்துவிட வேண்டும் என்று கோருவது அதருமமானது, சட்டவிரோதமானது, விவேகமற்றது. ராஜ மானியத்தை நிறுத்த வேண்டும் எனப் பிரதம மந்திரியின் கோஷ்டியில் உள்ள காங்கிரஸ்காரர்கள் விரும்பினாலும் சரி, இப்பொழுது எதிர்க்கட்சியினராக அமர்ந்துள்ள காங்கிரஸ்காரர்கள் விரும்பினாலும் சரி, இது உடன்படிக்கையை முறிக்கும் அதருமமேயாகும். தேசத்தின் கௌரவம் என்று ஒன்று உண்டு. அதை இம்மாதிரி மாசுபடுத்தலாகாது. பதவிப் பொறுப்பில் இருப்பவர்கள் யாராக இருந்த போதிலும் இந்திய சர்க்காரின் நாணயம் காப்பாற்றப் பட்டாக வேண்டும். முன்னாள் மன்னர்களுக்குக் கிடைத்த உரிமைச் சாஸனம் வேறு, அரசியல் சாஸனம் வேறு. அவர்களுடன் செய்துகொண்ட உடன்படிக்கைதான் அந்த உரிமைக்கு உண்மையான அடிப்படை. எனவே, அந்த உடன்படிக்கையை அரசியல் சாஸனத் திருத்தத்தால் மறுக்க முடியாது. இது சர்தார் வல்லபபாய் பட்டேலின் கௌரவத்தைப் பற்றிய விஷயம் என்பதை நாம் மறந்துவிடலாகாது. மன்னர்கள் உடன்படிக்கையின்படி தாம் செய்ய வேண்டியதை நிறைவேற்றி விட்டார்கள். வாக்களித்தபடி அரசாங்கம் தனது கடமையைச் செய்தாக வேண்டும்.

ராஜ மானியத் தொகைகளைக் கொடுத்து வருவதன் காரணமாகத் தேசப் பொருளாதாரம் பாழ்பட்டுப் போகாது. புனிதமான உடன்படிக்கையை நடத்தி வைப்பதன் காரணமாக நமது பொருளாதாரமே சிதைந்து விடும் என்பது உண்மையான நிலைமையாக இருந்தால் அது வேறு விஷயம், திவாலாகி விடும் நிலைமை வந்து விட்டாலொழிய ஒப்பந்தத்தை மீறி நடக்கலாகாது. அது சோஷலிஸமல்ல; நேர்மையின்மையே ஆகும். வாக்குறுதியை நாம் புறக்கணித்தால் வால்மீகி, கம்பன், துளசிதாஸர் ஆகியோரின் இதிகாசங்கள் பயனற்றவை என்று ஆகிவிடும். இந்திய யூனியனின் ஸ்தாபகர்கள் கொடுத்த வாக்குறுதியை நாம் கௌரவிப்போமாக. வாக்களித்த ராஜ மானியம் தமக்குத் தேவை இல்லை என்று நினைக்கும் முன்னாள் மன்னர்கள் வேண்டுமானால் அவற்றைக் கைவிடட்டும். ஆனால் தொடர்ந்து அது தமக்குக் கிடைத்து வரவேண்டும் என்று விரும்புகிறவர்கள் சிரமத்துக்கு உள்ளாகக் கூடாது. ஆளும் கட்சியின் தயவைப் பெறுவதற்காக ராஜ மானியத்தை நீக்குவதற்குச் சாதகமாக வோட்டுச் செய்யும் ஓரிரண்டு முன்னாள் மன்னர்கள் இருக்கின்றனர் என்ற காரணத்தினால் மற்றவர்களைக் கஷ்டத்துக்கு உள்ளாக்கக் கூடாது.

★

''கர்ஸன் முதல் நேரு வரை'' என்ற தலைப்பில் ஸ்ரீ துர்க்கா தாஸின் கட்டுரைத் தொடர் ''ஹிந்து''ப் பத்திரிகையில் வெளியாகிறது. நான்காவது கட்டுரையில் அவர் எழுதியிருப்பது என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. ஸ்ரீ ராஜேந்திர பிரஸாதுக்கு எதிராக ராஷ்டிரபதி பதவிக்கு என் அபேட்சை இருந்ததாக அதில் சொல்லியிருப்பது வெறும் கற்பனை. ராஜேந்திர பிரசாத் அவர்களும் நானும் ஒருவருக்கொருவர் மிக நெருக்கமானவர்கள். மதிப்புக்குரிய ஒரு பதவி விஷயமாக எங்களிடையே போட்டி எழுவது என்பது எக்காலத்திலும் நினைக்க முடியாத விஷயம். இதைப் பற்றி ஒரு சுருக்கமான அறிக்கையை ராஜேந்திர பிரசாத் 1949 ஜூன் 10ந் தேதி வெளியிட்டார். ''சுதந்திர யாத்திரை'' (Pilgrimage to Freedom) என்ற தமது புத்தகத்தின் 567வது பக்கத்தில் ஸ்ரீ கே. எம். முன்ஷி அதை வெளியிட்டிருக்கிறார். இந்தச் சர்ச்சைக்கு அது முடிவுகட்டிவிடும் என்று நம்புகிறேன்.

ராஜேந்திர பிரசாத் வெளியிட்ட அறிக்கை வருமாறு :

''அரசியல் சாஸனம் அமுலுக்கு வருகையில் குடியரசின் உயர்ந்த ஸ்தானமாகிய ராஷ்டிரபதி பதவிக்கு இருவர் போட்டியிடுவர் என்ற கரடியை யாரோ கட்டிவிட்டிருக்கிறார்கள். இது எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. இது அடியோடு ஆதாரமற்ற கதை. இவ்வளவு பெரிய பதவி விஷயமாகத் தனி நபர்களின் பெயரை பிரஸ்தாபித்து விவாதம் செய்வதை நான் கண்டிக்கிறேன். மதிப்புக்குரிய எந்தப் பதவிக்காகவும் ராஜாஜிக்கும் எனக்குமிடையே போட்டி

எழும் பிரச்னையே இல்லை, எழுவது சாத்திய மும் அல்ல. எனவே, இத்தகைய பிரசாரத் துக்குச் செவிசாய்த்துத் தவறுதலாக நடந்து கொள்ள வேண்டாமென்று பொதுமக்களை எச்சரிக்கிறேன். இத்தகைய பிரசாரத்தில் ஈடுபட வேண்டாமென எல்லோரையும் கேட்டுக் கொள்கிறேன்.''

சர்தார் பட்டேலையும் ஸ்ரீ ஜவாஹர்லாலை யும் பற்றிய விஷயங்களை என்னிடமிருந்து ஸ்ரீ தேவதாஸ் காந்தி தெரிந்து கொண்டு வந்தார் என்று ஸ்ரீ துர்க்காதாஸ் கூறியுள்ள கதையும் கலப்பற்ற கட்டுக்கதை. என் மருகரான ஸ்ரீ தேவதாஸ் காந்தியுடனே அல்லது பிற ருடனே இத்தகைய விஷயங்களை விவாதிப்ப தில்லை என்ற உறுதியில் நான் மிகக் கண் டிப்பாக இருந்து வந்திருக்கிறேன். இத்த கைய இங்கிதமற்ற காரியங்களைச் செய்யக் கூடாது என்று அறியுமளவுக்கு எனக்கு அநுபவம் உண்டு.

தெரியாத விஷயங்களை வெட்டவெளிச்ச மாக்குவதாகக் கருதி வெளியிடப்படும் கதைகள் எப்போதுமே சுவையாக இருக் கும். உண்மையற்றவையாக இருந்த போதி லும் அவற்றை மக்கள் வேதமாக மதித்து ஆவலுடன் ஏற்றுக் கொள்வது சாத்தியமே. ஆகையால்தான் இந்தக் குறிப்பை நான் எழுத வேண்டியுள்ளது.

★

விஷக் கிருமிகளைப் பரப்பும் போர் முறை யில் அமெரிக்கா ஆராய்ச்சி செய்கின்ற அவக் கேடான விஷயம் பற்றிச் சமீபத்தில் எழுதி யிருந்தேன். இப்போது, எதிராளியின் நட வடிக்கையை எதிர்பாராமலே அமெரிக்கா விஷக் கிருமியைப் பரப்பும் போர் முறையை அடியோடு கைவிட்டு விட்டதாகவும், கைவச முள்ள விஷக் கிருமி ஆயுதங்களை அழிக்க முடிவு செய்து விட்டதாகவும் செய்தி வெளி யாகியுள்ளது. எதிரி விஷக் கிருமிகளைப் பரப்பும் முறையை மேற்கொண்டாலும்கூட அமெரிக்கா அவ்விதம் செய்யாது என்று ஸ்ரீ நிக்ஸன் கூறியுள்ளார். இவ்விஷயமான ஆராய்ச்சியும் இனி தற்காப்பு குறித்து மட் டுமே இருக்கும் என்கிறார். கிருமிப் போர் முறையைத் தடுக்கப் பிரிட்டன் உத்தேசித் துள்ள சர்வதேச மகாநாட்டில் கனடா வோடு அமெரிக்காவும் சேரும் என்றும் அவர் கூறியுள்ளார். இது ஸயன்ஸ் அறிவினால் உண் டான காட்டு மிராண்டித்தனத்தின் மீது நாகரிக உணர்வுக்கு ஏற்பட்டுள்ள வெற்றி யாகும். உலக மாந்தர் அனைவரும் இது பற்றி மகிழ்வர்.

இந்தப் பிரகடனத்திலிருந்து இன்னும் பெரிய ஓர் அடுத்த நடவடிக்கையிலும் நம்பிக்கை கொள்ளத் தோன்றுகிறது. அதாவது கிருமிப் போரைப் போலவே, அணு ஆயுதப் போரையும் விட்டு விட வேண்டும்; கைவசமுள்ள அணுஆயுதங்களை அழித்துவிட வேண்டும். இதற்கும் எதி ராளியை எதிர்பாராமல் தன்னம்பிக்கை யுடன் முதல் நடவடிக்கை எடுக்க வேண்டும். 'அணு ஆயுதங்களைப் பிரயோகிப்பதற்காக அவற்றைத் தயாரிக்கவில்லை; எதிராளியை அச்சுறுத்தவே அவை தயாரிக்கப்படுகின் றன' என்று சொல்கின்றனர். ஆனால் உண்மையில் ஒருதரப்பினர் அணு ஆயுத உற் பத்தியில் ஈடுபடுவதால் மறுதரப்பும் அதில் அதிகமாகவே முனைகிறது: இதில் மேன் மேலும் போட்டி பெருகுகிறது.

அணு ஆயுத சோதனைகளால் பாதிக்கப் படும் பல நாடுகள் இவ்விரு தரப்பில் எதை யும் சாராதவை. சம்பந்தப்படாத தம்மைப் பாதிப்பதற்கு எத்தரப்புக்கும் உரிமை இல்லை என்று இந்தப் பல நாடுகளும் உரிமையுடன் வற்புறுத்த முடியும். இது குறித்த என் புத்தகம் குருஷேவின் ஆணைப் படி ருஷிய மொழியில் பெயர்த்து வெளி யிடப்பட்டது.*

தம்மைப் பாதிக்கக்கூடாது என்று வல்லரசு களிடம் வற்புறுத்துவதற்குப் பனிப் போரில் சம்பந்தப்படாத நாடுகள் பெற்றுள்ள உரிமை யானது, வல்லரசுகள் போர்புரிவதற்குப் பெற் றுள்ள உரிமையைவிட உயர்ந்தது. இதற்கு வல்லரசுகள் பணிந்தே ஆகவேண்டும்.

★

மேற்கு வங்கத்தில் ஏற்பட்டுள்ள பயங்கர நிலை கிராமப்புறம், நகரப்புறம், ஆலைகள், சுரங்கங்கள் இவை அனைத்தையும் கல்வி நிலையங்களையும் கூடப் பற்றி விட்டது; இதை எதிர்த்துச் செயலுருவில் நடவடிக்கை எடுக்க வேண்டும் என 'ஹிந்து'ப் பத்திரிகை அழுத்தமாகவும், சரியாகவும் வற்புறுத்தி யுள்ளது. கொலை, கொள்ளை, கேரோ ஆகியவை கம்யூனிஸ மேலாதிக்கத்தின் கீழுள்ள வங்க ஆட்சியில் அன்றாட அம்சங் களாகி விட்டன. தில்லி உள்துறை மந்திரா லயம் தவிர மற்ற அனைவரும் இதைத் தடுக்கத் தீவிர உணர்வு கொண்டுள்ளனர். தில்லி உள் துறை மந்திராலயத்தின் கடமை நாட்டில் ஒழுங்கை நிலைநாட்டுவதே; பிரதம மந்திரி யைப் பதவியில் நிலைநாட்டுவதல்ல. செய லின்றி இருப்பது போதாது என்று, தடுப்புக் காவல் சட்டத்தை மத்தியச் சட்டம் மூலம் நீடிக்காமல் விட்டிருப்பது, கம்யூனிஸ்டுகளுக் கும் குண்டர்களுக்கும் மேலும் ஊக்கமளிப்ப தாகும்.

★

திரு கருணாநிதி வருமான வரியில் சில சலுகைகள் பெற்றதாகவும், இதை அடுத்தே ஸ்ரீமதி இந்திரா காந்தியின் சர்க்காருக்கு அவரது கட்சி ஆதரவு தந்ததாகவும் ராஜ்ய சபையைச் சேர்ந்த சுதந்திரக் கட்சி அங்கத் தினர் ஸ்ரீ லோக்நாத் மிச்ரா ஆதாரமின்றிக் குற்றம் சாட்டிப் பேசியிருப்பது குறித்து வருந்துகிறேன். ஸ்ரீ மிச்ராவின் ஆதார மற்ற குற்றச்சாட்டு ஒரிஸ்ஸா முதல்வர் ஸ்ரீ ஆர். என். ஸிங்தேவ் அவர்களின் கவனத் துக்கு உரியது.

ரபாட் பிரச்னையில் தில்லி சர்க்காருக்கு ஆதரவாக தி. மு. க. வோட்டளித்தது தவறு எனக் கருதுகிறேன். அது தி.மு.க.வுக்கே மிகவும் ஊறு உண்டாக்குவது எனக் கருது கிறேன். ஆயினும் இவ்வாறு செய்ததில் தி.மு.க. வுக்கு அரசியல் காரணங்கள் ஏதே னும் இருந்திருக்க வேண்டும்.

---

* *Voice of the Uninvolved*, **National Book Trust, New Delhi.**

**ஸ்ரீ பியாரேலால் அவர்கள் பல்லாண்டுகள் காந்திஜியின் அந்தரங்கக் காரியதரிசியாக அரும்பணி ஆற்றி அடிகளின் பூரண நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். அண்ணலிடம் இருந்த தொடர்பு காரணமாகச் சுதந்திரப் போராட்டப் பெருந் தலைவர்கள் அனைவருட னும் நெருங்கிப் பழகிய ஸ்ரீ பியாரேலால் இக்கட்டுரையில் ராஜாஜியிடம் தமக்குள்ள பேரன்பையும் பெருமதிப்பையும் வெளியிடுகிறார்.**

# மகாத்மாவின் மனச்சாட்சிக் காவலர்

**பியாரேலால்**

என்னைப் பொறுத்தமட்டில் ராஜாஜி ஒரு தனிமனிதருக்கு மேம்பட்டவர்; அவரே ஒரு ஸ்தாபனம். அவர் முப்பதாண்டுக் காலத்தில் காந்திஜியிடமிருந்து கருத்து மாறுபாடு கொண்ட போதெல்லாம் நான் அவரைப் பின்பற்றவில்லை. ஆயினும் ராஜாஜியை விடுத்து காந்திஜியையோ, நமது சத்தியாக்கிரகச் சுதந்திரப் போராட்டத்தையோ என்னால் நினைக்கவும் முடியவில்லை.

ஸி. ஆர். என்ற மனிதர் அவர் வெளியிடும் கருத்துக்களைவிட உயர்ந்தவர்; அவர் வகித்த பெரும் பதவிகளைவிட உயர்ந்தவர். அவரது அரசியல் சேவையின் சரிதம் மிக உயர்ந்தது. ஆனால் ஸி. ஆர். என்ற மனிதரோ அந்தச் சேவையைவிடவும் உயர்ந்தவர்.

அவரது சிந்தனை ஸ்படிகம் போல் தெளிந்தது; அவரது புத்தி கூர்வாள் போல் தீட்சண்யமானது; அவரது வாதம் வெல்ல வொண்ணாதது; பொருளைப் பகுத்து ஆராய்வதில் அவர் பெரும் ஆற்றல் பெற்றவர்; விவாதத்தில் அவரைக் கலங்கச் செய்ய முடியாது - இதை யெல்லாம் அறியாதார் யார்? அவரது அறிவொளி கனிந்த நகைச்சுவை பற்றியும், எதிராளியை வாடி விழச் செய்யும் குத்தல் பேச்சுப் பற்றியும் அறியாதார் இல்லை. ஆனால் அவரது இயல்பிலுள்ள அன்பின் இதமான கதகதப்பைப் பலர் அறியவில்லை என்றே அஞ்சுகிறேன். அவரது இதயம் அன்பு மயமானது; அவரது அநுதாபம் அகன்று விரிந்தது; உள்ளுக்குள் அவர் மிகவும் மென்மையும் நுட்பமும் பொருந்தியவர். வெளிப் பார்வைக்கு அவர் வாஞ்சை யற்றவர் போல் தோன்றக் கூடும். ஆனால் தமது நுட்பமான அந்தரங்கத்துக்குக் காப்பாகவே அவர் இப்படிப்பட்டதொரு கவசத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறார். காந்திஜியின் பணியில் நான் ஈடுபட்டது முதல் பலப் பல ஆண்டுகள், வீட்டுப் பெரியவர்களுக்குக் குழந்தை சேவை செய்வதுபோல் ராஜாஜிக்குச் சேவை செய்திருக்கிறேன். அவரது அன்பையும் விசுவாசத்தையும் விவேகமான அறிவுரையையும் ஏராளமாகப் பெற்றிருக்கிறேன். இந்த அநுபவங்களில் அடைந்த தூய ஆனந்தத்தை என்னால் என்றும் மறக்க முடியாது.

ராஜாஜிக்குத் தீவிரமான ஆஸ்துமா இருந்தது. நான் அறிந்த மட்டில், மருந்துகள் ஏதுமின்றித் தமது இரும்பை நிகர்த்த திடசங்கற்பத்தாலும், தயைதாட்சிண்யமின்றி ஒழுக்கக் கட்டுப்பாடுகளை அநுசரித்ததாலுமே ஆஸ்துமாவைக் குணமாக்கிக் கொண்ட ஒரே ஒருவர் ராஜாஜிதான்.

காந்திஜி தமது "மனச்சாட்சியின் காவலர்கள்" என்று கருதிய பலரை எப்போதும் தம்முடன் வைத்திருப்பார். அவர்களில் ராஜாஜி முதல் ஸ்தானம் பெற்றவர். காரணம், அவரது வெண்பனிபோன்ற தூய நடத்தையும், சத்தியத்தில் அவருக்கு உள்ள தீவிரப் பற்றும், பரிபூரணமாக ஆன்ம அர்ப்பணம் செய்துகொள்ளும் அவரது இயல்புமே.

ராஜாஜியின் வாழ்க்கை மிக எளிமையானது; தெய்வத்துக்கு அஞ்சி நடத்தப்படும் அவ்வாழ்க்கை நன்கு வரையறை செய்யப்பட்டது. அதன் பலனாக 92 வயதிலும் அவர் சளியாத உழைப்புத் திறனும், சக்தி வாய்ந்த அறிவுத் திறனும், சோர்வுறாத உடல் — மனத் திட்பமும் பெற்று ஆதரிசமாக விளங்குகிறார். குறிப்பாக இளைஞர்கள் அவரது சீலத்தைப் பின்பற்ற வேண்டும்.

காந்திஜி வாழ எண்ணிய நூற்றிருபத்தைந்து ஆண்டுகளையேனும் ராஜாஜி குறைந்த பட்சம் பூர்த்தி செய்வாராக! நம் முன்னே கடல் கொந்தளிக்கிறது. ராஜாஜி நமக்கு வழி காட்டும் கலங்கரை விளக்கமாக வாழ்வாராக!

படத்தில் காந்திஜியுடன் ராஜாஜியையும் இக்கட்டுரை ஆசிரியர் பியாரேலால் அவர்களையும் காணலாம்.







அலுவலகங்களுக்கு உட்புற அழகு படுத்தும் வேலையை ஏற்றுச் செய்பவரும், காண்டிராக்டருமான திரு. R. சுப்பிரமணியம் அவர்கள் கூறுகிறார்கள்.

"அலுவலகங்களுக்கு வர்ணம் பூச நான் எப்பொழுதும் சிபாரிசு செய்வது நவீன 'ஆல்கைட்-ப்ளஸ்' சேர்ந்த ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பெயிண்டு ஒன்றுதான்."

அலுவலகங்களுக்கு கவர்ச்சியையும், அழகிய தோற்றத்தையும் அளிக்கக் கூடிய பெயிண்டுகள்தான் தேவைப்படுகிறது. அதனால்தான் நவீன ஆல்கைட்-ப்ளஸ் சேர்ந்த ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமலை மரப்பலகைகள், உலோகங்கள், சுவர்கள், மற்றும் பிளாஸ்டிக் ஆகியவற்றின் பரப்புகளின்மேல் நான் உபயோகிக்கிறேன். நவீன ஆல்கைட்-ப்ளஸ் இரண்டு வழிகளில் வேலை செய்கிறது. முதலாவதாக எந்த பரப்பில் பூசினாலும் மிகவும் சிறந்த அளவில் பிரகாசத்தைக் கொடுக்கிறது. இரண்டாவதாக பூசப்பட்ட இடத்தை மிகவும் உறுதியோடு இணைந்து கொண்டிருப்பதால் புதிதாக பூசப்படும் பொழுது இருந்த பிரகாசம் அப்படியே வருடக்கணக்கில் நிலைபெற்று இருக்கிறது.

மனதிற்குகந்த கண்கவர் வண்ணங்களில் ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் கிடைக்கிறது. ஒரு நிறத்தை மற்றொரு நிறத்தோடு சேர்த்து எண்ணற்ற விதமான அழகிய நிறங்களை உண்டு பண்ண முடியும்.

இதனுடைய விலையில் கிடைக்கும் வேறெந்த பெயிண்டுகளையும் விட ஒவ்வொரு லிட்டர் ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பெயிண்டினால் அவைகளைவிட அதிக பரப்பிற்கு பூச முடிகிறது. ஒவ்வொரு அலுவலகங்களுக்கும் நவீன ஆல்கைட்-ப்ளஸ் சேர்ந்த ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பெயிண்டை உபயோகிக்க நான் பலமாக சிபாரிசு செய்கிறேன்.






எப்பொழுதும் பிரகாசமாயிருங்கள்!
சிறந்ததையே தேர்ந்தெடுங்கள்!!

ஷாலிமார் பெயின்ட்ஸையே வாங்குங்கள் !!!

# தனித்து நின்றும் போராடுவார்

**ஆசாரிய கிருபளானி**

ராஜாஜியின் தொண்ணூற்று இரண்டாவது பிறந்த தினத்தன்று அவரை நமஸ்கரிக்கிறேன். பழைய சுதந்திர வீரர் அணியில் எஞ்சி உள்ளவர் அவரே.

1920ல் சத்தியாக்கிரகப் போராட்டம் ஆரம்பித்த போதே ராஜாஜி காந்திஜியின் இயக்கத்தில் சேர்ந்து விட்டார். அப்போது இளவயதிலிருந்த அவருக்கு வக்கீல் தொழிலில் செழிப்பான எதிர்காலம் இருந்தது; நீதிபதியாகக் கூடிய வாய்ப்பும் இருந்தது; இருப்பினும் சத்தியாக்கிரகப் போரில் ஈடுபட்டார். அவரது இல்லத்தில் காந்திஜி தங்கி இருக்கும் போதுதான் ஒரு நாள் அதிகாலையில் உபவாசமும் பிரார்த்தனையும் புரிந்து தேசிய ரீதியில் சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் தொடங்குவதற்கு முடிவு செய்தார்.

சிறிது காலத்துக்குப்பின் காந்திஜி, 'யங் இந்தியா'வில், ''பிரிட்டிஷ் சிம்மத்தின் பிடரியை உலுக்குவோம்'' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரைக்காக ராஜதுவேஷக் குற்றம் சாட்டப்பட்டு ஆறுண்டுச் சிறைவாசம் விதிக்கப்பட்டார். அப்போது ராஜாஜி, ''யங் இந்தியா''வின் ஆசிரியரானார். அதிலிருந்து ஒரு சிறிய இடைக்காலம் தவிர, ராஜாஜி போராட்டத்துக்குப்பின் போராட்டமாக ஈடுபட்டு வருகிறார். காந்திஜியைப் பின்பற்றியவர்கள் அவரை ஒரு கேள்வியும் கேட்காமல் குருட்டுத்தனமாக அவரது வழியில் சென்றதாகச் சொல்வதுண்டு. ஆனால் ராஜாஜியைப் பற்றி இவ்விதம் எவரும் கூற முடியாது. ஜின்னா – முஸ்லிம் லீக் விஷயத்தில் ராஜாஜி காந்திஜியிடமிருந்து மட்டுமின்றி, காரியக் கமிட்டியின் மற்ற அங்கத்தினர்களிடமிருந்தும் மாறுபட்டார்; தேசத்தில் நிலவிய பொதுக் கருத்திலிருந்தும் மாறுபட்டார்.

தமது நோக்கம் சரியானது என்ற உறுதியிருந்தால் போதும், தன்னந்தனியாக நின்றேனும் அந்த நோக்கத்துக்காகவே போராடுவது என்ற பண்பினை ராஜாஜி தம் வாழ்வில் காட்டிவந்திருக்கிறார்.

சுதந்திரத்துக்குப் பின் ராஜாஜி சென்னை முதன் மந்திரியான போது அவர் நிர்வாக இயந்திரத்தில் ஒழுக்கக் கட்டுப்பாடுகளை விதித்தது மட்டுமின்றிச் சட்டசபையாளரும் அந்தக் கட்டுப்பாடுகளைப் பின்பற்றுமாறு செய்தார். சட்டசபையாளர் நிர்வாகத்தில் குறுக்கிடுவதாலேயே லஞ்சம் முதலிய ஊழல்கள் விளைவதைக் கண்டு இவ்விதம் செய்தார். ஆதாரக் கல்வி குறித்த அவரது திட்டத்தைப் பற்றி, நாட்டின் கல்விப் பிரச்னையை உணராத அவரது காங்கிரஸ் சகாக்கள் தவறாக அர்த்தம் செய்ததால் அவர் பதவியைத் துறந்தார்.

ஹிந்தியை எதிர்ப்பதால் அவருக்கு வட தேசம் எனப்படும் பகுதியில் உள்ள பொது ஜனங்களின் ஆதரவு பாதிக்கப்படுகிறது. ஆயினும் தேச பக்தர், அரசியல் அறிஞர், கல்விமான் என்ற முறையில் அவருக்குரிய மரியாதை பாதிக்கப்படவில்லை.

நமது காலத்தின் மாமதியாளர் அவர். கம்யூனிஸ்ட் கோஷங்களை எழுப்பாததால் அவரைப் பலர் முற்போக்காளராக மதிப்பதில்லை. காந்திஜியைப் பற்றியும் இவ்வாறே பேசப்பட்டது. ராஜாஜி ஆங்கிலத்தில் ஒரு சக்தி வாய்ந்த எழுத்தாளர். தாய்மொழியான தமிழில் அதைவிடச் சக்தி வாய்ந்த எழுத்தாளர். ஹிந்து தத்துவ சாஸ்திரங்கள் குறித்து எழுதியுள்ள அவர், குழந்தைகளுக்காகவும் கதைகள் எழுதியிருக்கிறார். அவரது ராமாயணம் எத்தனையோ இந்திய மொழிகளிலும், அந்நிய பாஷைகளிலும் பெயர்க்கப்பட்டுள்ளது.

அவர் வாதம் செய்வதில் ஆற்றல் மிக்கவர். கயை காங்கிரஸின் போது இளைஞரான அவர், முதுபெரும் தலைவர்களான ஸி. ஆர். தாஸ், மோதிலால் நேரு ஆகியோரை எதிர்த்து, சிறப்பாகப் புரிந்த வாதத்தினால் அவரது கருத்தே காங்கிரஸில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. காங்கிரஸின் தலைமையிலிருந்து தாஸ் விலக வேண்டியதாயிற்று.

ராஜாஜி உணர்ச்சிவசப்பட்டுக் கோபமடைவது அபூர்வம்.



இன்று அவர் தம்மால் தோற்றுவிக்கப்பட்ட சுதந்திரக் கட்சியை முன்னின்று நடத்துகிறார். அடிமேல் அடி வைத்தே ஜனநாயகத்தில் சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுமென அவர் கருதுகிறார். இந்தியாவில் நவீன முறைகளைப் புகுத்தினாலும் அவை நமது நீண்டகாலப் பண்புக்கும் கலாசாரத்துக்கும் ஒவ்விய தாக இருக்க வேண்டுமெனக் கருதுகிறார். நம் மக்களின் தொன்று தொட்டு வந்துள்ள தனிப்பட்ட தன்மைகளுக்கு இசையச் சென்றால்தான் தேசம் உண்மையில் சுபிட்சமும், முன்னேற்றமும் காண முடியும் என்று காந்திஜி எண்ணியது போலவே ராஜாஜியும் கருதுகிறார். ஒவ்வொரு தேசத்துக்கும் இயற்கை

யாக ஏற்பட்ட பண்பு — சுதர்மம் — என்று ஒன்று உண்டு; அதையே பின்பற்ற வேண்டும்; பிற நாடுகளைக் 'காப்பி' அடிக்க வேண்டிய தில்லை. மற்ற நாடுகளை அப்பட்டமாகப் பின்பற்றுவது ஆபத்துக்கே வழி.

இப்போது இருப்பதற்கு அதிகமாகப் புரட்சிகர மாறுதல் எதுவும் கூடாது என்று ராஜாஜி சொல்வதாகவும், அவர் தனியார் தொழிலை மட்டுமே ஆதரிப்பதாகவும் கூறுப வர்கள் இருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர் கட்டுப்பாடற்ற முதலாளித்துவத்தை ஆதரிப்பவர் அல்ல. சுதந்திரமான தொழிற் போட்டியிலேயே அவர் நம்பிக்கை கொண் டிருக்கிறார். சர்க்காரின் தொழில்—வாணிப ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பது போலவே முதலாளிகளின் ஏகாதிபத்தியத்தையும் எதிர்ப்பவர் அவர். தனி முதலாளிகள் தொழில் நடத்துகையில் அத்தொழில் நன்கு ஒழுங்கு செய்யப்படாவிடினும் அதில் ஓரளவு போட்டியைத் தவிர்க்க முடியாது; ஆனால் சர்க்கார் தொழில் நடத்தும் போதோ அது மட்டுமே ஏகபோக்கியம் பெற்றிருக்கும்; எனவே, ஒழுங்கு செய்யப்படாத தனி முதலாளித்துவத்தைவிடச் சர்க்காரின் தொழிலாதிக்கம் அதிக அபாயத்தை விளை விக்கக் கூடும். இப்போது சர்க்கார் பல தொழில்களை ஏகபோக்கியமாக எடுத்துக் கொண்டிருப்பதை ராஜாஜி தேசிய உடைமை யாக்கியதாகக் கூறுவதில்லை; சர்க்காருக்குச் சர்வாதீனம் செய்து கொண்டதாகவே கூறுகிறார். இதைத்தான் சர்க்காரின் முத லாளித்துவம் என்று மேல்நாடுகளில் சொல் கின்றனர். லைசென்ஸ்கள், பெர்மிட்கள், கோட்டாக்களை நமது சர்க்கார் தாரதம்மி யம் பாராமல் அதிகாரக் கண்ணோட்டத்தி லேயே வழங்குகின்றனர்; இதன் மூலம் தேர்தல்களைச் சௌகரியமாக நடத்திக் கொள்ள ஏராள நிதியும் சேர்க்கின்றனர். இதனால் அரசியல்வாதிகளிடமும், நிர்வாகச் சிப்பந்திகளிடமும் லஞ்சம் பரவலாகி விட் டது. ராஜாஜி இதையெல்லாம் ஆட்சேபிக் கிறார். இதனால் அவர் தனியார் தொழிலை மனம் போனபடிச் சுயேச்சையாக விட வேண்டுமென விரும்புகிறார் என்று அர்த்த மல்ல. ஆரோக்கியமான தொழிற் போட்டி இருக்க வேண்டும்; இதற்கு மக்கள் நலனையே கருதும் நேர்மையான சர்க்காரின் கண்டிப்பான மேற்பார்வையும் வேண்டும் என்று ராஜாஜி விரும்புகிறார். மக்களின் இன்பத்தைச் சர்க்கார் பலவந்தமாக உண் டாக்க முடியாது என்பது அவரது கருத்து. மக்கள் தாமே சுய முயற்சியில், தம் வழிப் படி இன்பத்தைத் தேடிச் சென்று அடைய வேண்டும்; இதற்குச் சாதகமான சூழ் நிலையை மட்டுமே சர்க்கார் உண்டாக்கித் தர வேண்டும் என்கிறார்.

இறுதியில் எந்தக் கருத்து நிலைப்படும் என்பது எதிர்காலத்தின் மடியில் உள்ள விஷயம். இன்று காணப்படும் போக்குகள் நம் நாட்டுப் பண்புக்கு விரோதமானவை. பிற நாட்டினரைப் போலவே வேஷம் போட்டுப் போட்டு இந்தியா தனது ஆன்மாவை இழந்து விட்டதாகவே தோன்று கிறது. இவ்வழியில் எந்தத் தேசமும் தன்னை உண்மையாக நிர்மாணித்துக் கொள்ள முடியாது. தனிமனிதன் ஒருவன் உலகம் முழுவதைப் பெற்றாலும், ஆன்மாவை இழப்பானாயின் பயன் இல்லை என்கிறது பைபிள். தனிமனிதனுக்குச் சொன்னது தேசத்துக்கும் பொருந்தும்.

# புதிய மேயர்



சென்னைமாநகரின் மேயர் திரு பாலசுந்தரம் அவர்களும் (வலது) துணைமேயர் திரு வெங்கடேசன் அவர்களும் அண்மையில் ராஜாஜியைச் சந்தித்து ஆசி பெற்றார்கள்.

# காலமெல்லாம் போற்றும்...

## — பிராங்க் மொரேஸ் —

('இந்தியன் எக்ஸ்பிரஸ்' பிரதம ஆசிரியர்)

'ஒரே கருத்தை விடாமலிருக்க வேண்டும்' என்ற எண்ணம் அற்ப அறிவினரையே ஆட்படுத்தும் பூச்சாண்டி என்று எமர்ஸன் கூறினார். ராணுவத்தினர் ஆகட்டும், ராஜநீதி வல்லுநர் ஆகட்டும் — அசாதாரண ஆற்றல் வாய்ந்த எவருமே, எக்காலத்திலும் ஒரே கருத்தை விடாமல் பிடித்துக் கொண்டிருந்ததில்லை. ஜீவவேகத்துடன் உண்டாகிற மாறுபாடுகளை உணரவொண்ணாமல் போட்ட இடத்தில் போட்டபடி கிடக்கும் அறிவைத்தான் இவ்விதம் மாறாமலுள்ள மனப்போக்கு குறிக்கும். இப்படிப்பட்ட ஓர் அறிவுக்கு நுட்ப அநுபவமும் இராது; தீர்க்க தரிசனமும் இராது. ஏனெனில், அது பெரும்பாலும் கருத்தை மாற்றிக் கொள்ளும் தைரியம் இன்றி தன்னைச் சுற்றித் தானே ஒரு கூண்டு எழுப்பிக் கொண்டு அதற்குள்ளேயே வாழ்கிறது.

ராஜாஜியின் நீண்ட வாழ்வில், நிகழ்ச்சிகள் நெரியும் வாழ்வில் மாறாத ஒரு தொடர்பு இழை உண்டு எனில் அது அவர் கருத்தை மாற்றிக் கொள்ளாத போக்கைக் காட்டாதிருப்பதேயாகும். சிறிது காலத்துக்கு அவர் காந்திஜி என்ற தாரகை காட்டிய ஒளி ஒன்றையே பின்தொடர்ந்தார். ஆயினும் அந்த மகாத்மாவும் பாதையிலிருந்து விலகியதாக அவருக்குத் தோன்றியபோது அவரிடமிருந்தும் விலகிக் கொண்டார். அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்வதற்குத் தீரமும், தமது உணர்வில் ஆழ்ந்த உறுதியும் அவசியம். இவ்விரு குணங்களில் ராஜாஜி என்றுமே பின்தங்கி நின்றதில்லை.

ஒரு காலத்தில் மகாத்மாவுக்கு மிக நெருக்கத்திலிருந்த மும்மூர்த்தியரில் வல்லபபாய் பட்டேலுடனும் ராஜேந்திர பிரசாதுடனும் ஒருவராக இருந்தவர் ராஜாஜி. ''எனது கருத்துக்களை அதிகாரபூர்வமாக விளக்குபவர்'' என்று அவரை ஒரு போது காந்திஜியே குறிப்பிட்டார். 1920ஐ ஒட்டிய ஆண்டுகளில் பலர் அவரைத் 'தமிழக மகாத்மா' என்றே அழைத்தனர். அச்சமயத்தில் ஒத்துழையாமை இயக்கத்துக்காக காந்திஜி சிறைப்பட்ட போது, அவரது 'யங் இந்தியா' பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பு பெரும்பாலும் ராஜாஜியிடமே ஒப்புவிக்கப்பட்டது. மகாத்மாவின் எழுத்து நடைபோலவே ராஜாஜியின் நடையும் தெளிவானது. கச்சிதமானது. 'எவ்வளவு அவசியமோ அவ்வளவு எலும்புகள் மட்டுமே உடலில் இருப்பது போல எழுத்து நடையில் அவசியமான அளவுக்கு மட்டுமே வார்த்தைகள் இருக்க வேண்டும்' என்று ஸாமர்ஸெட் மாம் கூறியிருப்பதன் விளக்கமே ராஜாஜியின் எழுத்து நடை. 1920ஐ ஒட்டிய காலத்தில் அவர் காந்திஜியின் அதிகாரபூர்வமான எதிரொலியாக இருந்தார். ராம்ஸே மாக்டனால்டின் வகுப்புவாதத் தீர்வை ஆட்சேபித்து 1932 ஸெப்டம்பரில் மகாத்மா தமது சரித்திரப் பிரசித்தி பெற்ற உண்ணாவிரதத்தைத் தொடங்கிய போது, சமரஸம் உண்டாக வழி கண்டதில் பெரும் பங்கு ராஜாஜியுடையதே. பொறுமையை விடாமல், இன்னலைப் பொருட்படுத்தாமல் அவர் சமரஸத்துக்கு உழைத்தார்.



இதற்குப் பத்தாண்டுகளுக்கு முன்பு மகாத்மா சிறைச்சாலையில் இருந்த போது, அவரது கொள்கைகளை விளக்கிய வீரர் ராஜாஜியே. 1922 பிப்ரவரியில் சௌரி சௌராவில் இருபத்தியொரு கான்ஸ்டபிள்களும், ஒரு ஸப் இன்ஸ்பெக்டரும் கொண்ட ஒரு போலீஸ் ஸ்டேஷனை ஆத்திரவசமுற்ற ஒரு கூட்டம் கொளுத்தியது. இந்தக் கொடூரத்தைக் கண்டு ஆறாத அதிர்ச்சி அடைந்த காந்திஜி சட்ட மறுப்பு இயக்கத்தையே ரத்து செய்து விட்டார். இந்த முடிவு மோதிலால் நேருவையும், ஜவாஹர்லால் நேருவையும் நிலைகுலையச் செய்தது. சிறிது காலத்திலேயே காந்திஜி கைது செய்யப்பட்டு, ஆறு வருடச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார்.

மகாத்மா சிறையில் இருக்கையில், சட்டசபைகளைக் காங்கிரஸ் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்ற கொள்கையை மாற்ற வேண்டும் என மோதிலால் நேரு, ஸி.ஆர். தாஸ் ஆகியோர் தலைமையில் ஒரு கோஷ்டி வற்புறுத்தலாயிற்று. சட்டசபை பகிஷ்காரக் கொள்கையை மாற்றக் கூடாது என்பது காந்திஜியின் ஆதரவாளர்களுடைய கருத்து. இவர்களுக்குத் தலைமை தாங்கியவர் ராஜாஜி. 1922ல் கயை காங்கிரஸில் இப்பிரச்னை விவாதத்துக்கு வந்தது. ராஜாஜியே அன்று வெற்றியைத் தட்டிக் கொண்டார். ஸி. ஆர். தாஸ் காங்கிரஸ் தலைமைப் பதவியை ராஜிநாமா செய்து விட்டு, சட்ட சபைப் பிரவேசத்தை ஆதரித்து ஸ்வராஜ்யக் கட்சியை அமைத்தார். அன்று காங்கிரஸுக்குள் நடைபெற்ற போராட்டத்தில் ஒரு முன்னணி வீரர் ராஜாஜி. ஆனால் பதினைந்தாண்டு

களுக்குப்பின், அவர் நேர் எதிர்த் திசையில் நின்றார். 1937-ம் ஆண்டுத் தேர்தலில் காங்கிரஸ் அமோகமான வெற்றியடைந்தபின் அவர் அக்கட்சி ஆட்சிப் பொறுப்பையும் ஏற்க வேண்டும் என்று கூறினார். கட்சியில் செல்வாக்கு மிகுந்த ஒரு கோஷ்டி இதை ஆட்சேபித்தது. சட்டசபைக்கே போகக் கூடாது என்று முன்பு தீவிரமாகக் கூறி வந்த ராஜாஜி, இப்போது காங்கிரஸ் மந்திரி சபையும் அமைக்க வேண்டும் என்றார். சரித்திரக் கண்ணோட்டத்துடன் பின்நோக்கிப் பார்த்தோமாயின் இதில் முரண்பாடு ஏதுமில்லை. ஏனெனில், 1922ல் இருந்த சூழ்நிலைக்கும் 1937ல் இருந்த சூழ்நிலைக்கும் இடையே அவ்வளவு பெருத்த வித்தியாசம் இருந்தது. 1937ல் ராஜாஜி சென்னையில் தேர்தல் முறையின் கீழ் பதவி பெற்ற முதல் பிரதம மந்திரி ஆனார். (அக்காலத்தில் முதன்மந்திரியைப் பிரதம மந்திரி என்றே சொல்லுவர்.) அப்போது பதவி ஏற்றவர்களில் அவர் ஒருவரே மிக உயர்மட்டக் காங்கிரஸ்காரராவார். மற்ற மாகாணங்களில் இப்பதவி ஏற்றவர்கள் இரண்டாம் வரிசையினரே.

ராஜாஜி தமது களத்தை இப்படித் திடீரென மாற்றிக் கொண்டதற்குக் காரணம் என்ன என்று அப்போது பலர் வினவினர். எனக்குத் தெரிந்த வரையில் இதற்கு யூஸுஃப் மேஹரலி என்ற இளம் காங்கிரஸ்காரர்தான் சிறந்த விளக்கம் அளித்தார். ''சண்டையிடுவதில் சலிப்படைந்து, உருப்படியாக ஒன்றை நிர்மாணிக்க வேண்டும் என்ற விருப்பத்துக்கு உருவமாக இன்று ராஜாஜி இருக்கிறார். நம்முடைய தேசிய நடவடிக்கைகளில் இது ஒரு புதிய போக்கு. மற்ற எவரையும்விட இதற்குச் சிறந்த சின்னமாக விளங்குபவர் ராஜாஜியே'' என்று யூஸுஃப் மேஹரலி எழுதினார்.

ராஜாஜி முப்பதாண்டுகளுக்குப்பின் இன்னும் முன்னணியில் நிற்பது விந்தை. காங்கிரஸுக்கு வெறி பிடித்திருப்பதாகவே தோன்றும் இக்காலத்தில், அவர் நம் நாட்டு அரசியல் வாழ்வில் ஓரளவு அறிவுத் தெளிவைப் புகுத்த முயன்று வருகிறார். அவரது அறைகூவல் வனாந்தரத்தில் எழுப்பிய தனிக் குரலாகவே உள்ளது. ஆனால் இந்த நிலைமை அவரைத் தளரச் செய்யாது; தளரச் செய்யக் கூடாது.

பாகிஸ்தான் தோன்றுவதற்கு ஐந்தாண்டுகளுக்கு முன்பே அரசியல் வானில் புயல் அறிகுறிகளைத் தெற்றெனக் கண்டார் அவர். ஜின்னாவுடன் சமரஸம் செய்து கொண்டு, காங்கிரஸும் முஸ்லிம் லீகும் பரஸ்பரம் ஒன்றை ஒன்று புரிந்து கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தினார். பாகிஸ்தான் பிரிவினை என்பது சண்டமாருதமான, சண்டைக்கு ஆஸ்பதமான பிரச்னையாக இருந்த அக்காலத்தில் அவரது நோக்கங்களை மற்றவர் தவறாகப் புரிந்து கொண்டனர்; அதற்குத் தவறான வியாக்கியானங்கள் செய்தனர். காந்திஜி அவரைக் கைவிட்டார்.* அவரது வெகு நெருங்கிய சகாக்களில் சிலரும் அவரைப் பழித்தனர். ஆனால் பிற்பாடு நிகழ்ந்த சம்பவங்கள் அவரது தனியொரு விவேகக் குரல் எழுப்பிய அறைகூவலின் நியாயத்தை நிரூபித்து விட்டன!

ராஜாஜிக்குத் தாம் சொல்வதில் மனப்பூர்வமான ஈடுபாடு இருக்கிறது; அதை வெளியிடுவதில் தீரமும் இருக்கிறது. அவரது தீரம் வெறும் உணர்ச்சிபூர்வமானது அல்ல; அது புத்திபூர்வமானது. அவருக்கு ஒன்றில் உள்ள உறுதி அவருக்குள்ளேயே ஆழ வேரோடியிருப்பது.

அவரது நீண்ட வாழ்வில் பல தோணங்களில் அவர் தனியொருவராக நின்று, சுற்றியுள்ள புயலுக்கு முகம் கொடுத்து வெற்றி கண்டிருக்கிறார் — இன்றும் அப்படித்தான் நிற்கிறார். முதிர்ந்த குடிமகனாகிய அவர் வழங்கும் நல்லுரையின்படி இன்று சிலரே நடக்கின்றனர். ஆனால் நாளையும், அதற்குப்பின் பலப் பல நாட்களிலும் அவரது நினைவு மரியாதையுடன் போற்றப்படும்.

---

[ * பின்னால் 1943ல் ஆகாகான் மாளிகையில் சிறை வைக்கப்பட்டிருந்த காந்திஜியை ராஜாஜி சந்திக்க முடிந்தபோது பாகிஸ்தான் குறித்த தமது சமரசத் திட்டத்தை விளக்கினார். கச்சிதமாக எழுத்தில் வடிக்கப்பட்ட இத் திட்டத்தைக் கண்ட மாத்திரத்திலேயே காந்திஜி அதற்கு ஒப்புதல் அளித்துவிட்டார். ராஜாஜி திட்டத்தின் அடிப்படையிலேயே காந்திஜி சிறையிலிருந்து விடுதலையான பின் ஜின்னாவுடன் நீண்ட பேச்சு வார்த்தைகள் நடத்தினார். ''சுதந்திர யாத்திரை'' (Pilgrimage to Freedom) என்ற சமீபத்திய நூலில் இதுபற்றி ஸ்ரீ முன்ஷி எழுதுகிறார்: ''1943ல் ராஜாஜியால் தயாரிக்கப்பட்டு காந்திஜியின் ஆமோதிப்பைப் பெற்ற திட்டத்தின் அடிப்படையிலேயே காந்தி — ஜின்னா பேச்சுக்கள் நடக்கவிருந்தன.... காந்திஜி ஜின்னாவைச் சந்திக்கப் போகிறார் என்ற சூழலில் ஏற்பட்ட உணர்ச்சிக் குமுறலோடு நான் ராஜாஜியின் திட்டத்தை விரிவாகக் கண்டனம் செய்து எழுதினேன். என் கடிதத்தின் மார்ஜினில் காந்திஜி என்னுடைய வாதத்திலுள்ள தவறுகளைக் குறிப்பிட்டு விட்டு, தாம் ஜின்னாவைச் சந்திக்கு முன் அதைப் பிரசுரிக்க வேண்டாம் என்றும் கோரி என்னிடம் திருப்பி அனுப்பினார்.''

காந்தி — ஜின்னா பேச்சு வார்த்தை பயனின்றி முடிந்தது. ஜின்னா மேற்படி திட்டத்துக்குச் சம்மதம் தராததால் பேச்சு முறிந்தது.
— ஆசிரியர், கல்கி]



# மூன்று கடிதங்களும் ஒரு கட்டுரையும்

ஏ.கே.செட்டியார்

ராஜாஜி அவர்கள் 1913ஆம் ஆண்டில் — ஐம்பத்தாறு ஆண்டுகளுக்குமுன் — தமிழ் நாட்டின் பழம்பெரும் தேசியப் பத்திரிகையான 'சுதேச மித்திரனி'ல் எழுதிய மூன்று அரிய கடிதங்களைக் கண்டெடுத்தேன்.

'சுதேச மித்திரன்' அண்மையில் வெளியிட்டுள்ள "புண்ணியவான் காந்தி" என்ற நூலுக்காகப் பல மாதங்கள் 'சுதேசமித்திரன்' பழைய இதழ்களைப் படித்தபோது இம் மூன்று அரிய கடிதங்கள் கிடைத்தன.

இம் மூன்றும் 1913ம் ஆண்டின் இறுதியில் எழுதியவை; ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. எல்லாம் காந்தியடிகள் சம்பந்தமானவை.

ராஜாஜி அவர்கள் முதன்முதலாகத் தமிழ்ப் பத்திரிகைக்கு எழுதிய கடிதங்கள் இவைதாம் என்று கருதுகிறேன்.

முதலாவது கடிதம் எழுதியவரின் பெயரைக் குறிப்பிடாமல், "**தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் கஷ்ட நிவர்த்தி நிதியும், சேலம் வாசிகளும்**" என்ற தலைப்பில் சுதேச மித்திரனில் வெளியிடப்பெற்றது. இதனை எழுதியனுப்பியது ராஜாஜி அவர்களே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## முதலாவது கடிதம் *

தென் ஆப்பிரிக்காவில் உள்ள இந்தியர்கள் படும் கஷ்டத்தில் சேலம்வாசிகள் நிரம்ப அனுதாபம் காட்டி அடியிற் கண்டபடி பண உதவி செய்திருக்கிறார்கள். பண உதவி செய்வதில் மற்ற ஜில்லா வாசிகள் சேலத்தாரைப் பின்பற்றுவார்களாக.

| | |
|---|---|
| மிஸ்டர் எம். பத்மநாப செட்டியார் | 50 |
| ,, ராய்பகதூர் டி. சுப்பிரமணிய அய்யர் | 70 |
| ஆனரபிள் மிஸ்டர் டி. விஜயராகவாச்சாரியார் | 50 |
| ஆனரபிள் மிஸ்டர் பி. வி. நரசிம்மய்யர் | 25 |
| மிஸ்டர் எஸ்.வி. சுப்பிரமணிய அய்யர் | 50 |
| ,, டி.எஸ். திருவேங்கடாச்சாரி | 90 |
| ,, சி. ராஜகோபாலாச்சாரி | 150 |
| ,, பி.என். ரகுகுலநாயுடு அய்யர் | 30 |
| ,, டி.ஒய். நாராயணசாமி முதலியார் | 25 |
| ,, ஏ. அருணாசல செட்டியார் | 30 |
| ,, டாக்டர் கே. நாராயண அய்யர் | 20 |
| ,, கே. நடேச அய்யர் | 20 |
| ,, ஏ. வெங்கடேச அய்யர் | |
| மிஸ்டர் டி.பி. திருமல ராவ் | 5 |
| ,, எஸ்.சி.வெங்கடப்ப செட்டியார் | 15 |
| ,, எம்.வி. கோபால்சாமி செட்டியார் | 10 |
| ,, வி.எஸ். சுப்பிரமணிய அய்யர் | 10 |
| ,, ஒய்.வி. சீதாராம அய்யர் | 15 |
| ,, சி. அனந்தாச்சாரி | 10 |
| ,, பி. சீதாராமய்யர் (ஹொசூர்) | 8 |
| ,, எஸ்.கே. சடகோப முதலியார் | 15 |
| ,, சி.வி. ஸ்ரீனிவாச ராவ் | 4 |
| ,, சி.வி. ராமானுஜாச்சாரி | 4 |
| ,, பி.வி. நாமகிரி | 5 |
| மொத்தம் ரூபாய் | 737 |

இரண்டாவது கடிதம் "**தென் ஆப்பிரிக்கா இந்தியர்களுக்கு உதவி, சேலம் ஜில்லாவில் அதிக முயற்சி**" என்ற தலைப்பில் வெளிவந்தது.

## இரண்டாவது கடிதம் ‡

தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்கள் படும் கஷ்ட நிவர்த்திக்காகவும், தாய் தேசமாகிய இப்பாரத நாட்டின் பெருமைக்காகவும், அவ்விடத்தில் இப்போது நடந்து வரும் அஹிம்ஸா தர்மப் போராட்டத்துக்காகவும் இப் பரத கண்டத்திலுள்ள சகல மாகாணங்களிலிருந்தும் பொருளுதவி அனுப்பப்படும் சங்கதி அனைவருக்கும் தெரியும். அதிக தனவந்தர்கள் இல்லாத—திருச்சி, ஆற்காடு ஜில்லாக்களுக்கு முக்கிய தாலுக்காக்களைப் பறிகொடுத்துவிட்டு மிகவும் குறுகியுள்ள—சேலம் ஜில்லாவில் மற்றவிடங்களைவிட இக் காரியத்தில் அதிக முயற்சி எடுக்கப்பட்டு வருவது மிகவும் மெச்சிக்கொள்ள வேண்டிய விஷயம். சேலம் ஜில்லாவில்,

| | ரூ. அ.பை |
|---|---|
| இதுவரை வசூலான மொத்தம் | 1571–3–3 |
| தென்னாப்பிரிக்க இந்திய கமிட்டியாருக்கு இதுவரை அனுப்பப்பட்ட மொத்தம் | 1500–0–0 |
| பாங்கி, அனுப்பு முதலிய செலவு | 4–0–0 |
| தற்காலம் சேலம் ஐக்கிய சங்க பாங்கியில் இருப்பு | 67–3–3 |

இந்த ஜில்லாவில் கனவான்கள் மேற் சொன்ன விதம் உதவி புரிந்ததற்கு வந்தன

* 'சுதேசமித்திரன்' 13—11—1913 பக்கம் 6.
‡ 'சுதேசமித்திரன்' 10—12—1913.

மளிப்பதுடன் இன்னும் உதவி யளிக்காத மற்றவர்களும் சீக்கிரத்தில் தங்கள் கடமையைச் செய்து ஜில்லாவின் கீர்த்தியை ஸ்தாபிப்பார்கள் என்று நம்புகிறோம். ஏற்கனவே கையெழுத்துச் செய்யப்பட்டு வசூலாகாமல் நிற்கும் ரூ. 929ம் சீக்கிரம் வசூலாகிவிடும் என்று நம்புகிறோம்.

8–11–1913 **சி. ராஜகோபாலாச்சாரி**

இரண்டாவது கடிதத்தில் ராஜாஜி அவர்களின் அறிவாற்றலையும், தேச பக்தியையும் ஒழுங்கு முறையையும் நன்றாகக் காண்கிறோம்.

சேலத்தில் வசூலான தொகைதான், கடிதத்தில் முக்கியமானது. ஆனால் சேலம் என்ற பெயர் வந்தவுடனேயே சேலத்தின் அன்றையக் குறைகளை நன்கு எடுத்துக் காட்டியுள்ளார் ராஜாஜி அவர்கள். இதில் வசூலான தொகைக்கு எவ்வளவு முக்கியத்துவமோ, அவ்வளவு முக்கியத்துவம் சேலத்துக்கும் கொடுத்துள்ளார். இம்மாதிரி ராஜாஜி அவர்களால் மட்டும்தான் எழுத முடியும்.



சேலம் ஜில்லா, முசிரி திருப்பத்தூர் இரண்டு முக்கிய தாலூகாக்களையும் முறையே திருச்சி வட ஆற்காடு ஜில்லாக்களுக்கு பறிகொடுத்து விட்டதை எப்படிச் சொல்லாமல் சொல்கிறார்கள்!

ராஜாஜி அவர்கள்தான் எல்லோரைக் காட்டிலும் மிக அதிகமாகப் பணம் வழங்கினார் என்பதை முதலாவது கடிதத்தில் காணலாம். பணம் வழங்கியது மட்டுமன்று; பணம் சேகரித்தவரும் ராஜாஜி அவர்களே என்பது இரண்டாவது கடிதத்திலிருந்து நன்கு தெரிகிறது.

ராஜாஜி அவர்கள் பொதுப் பணத்தைப் பாதுகாப்பதிலும், கணக்கு வெளியிடுவதிலும் எவ்வளவு கருத்துள்ளவர் என்பதும் விளங்குகிறது.

'தென்னாப்பிரிக்க இந்திய கமிட்டி' யாருக்கு அனுப்பிய 1500 ரூபாய் தவிர, பாக்கி ரூபாய் 67—3—3யும் தாம் வைத்திருக்கவில்லை. சேலம் ஐக்கிய பாங்கியில் போட்டு வைத்திருந்தார். மிகுந்த செல்வாக்கும், நல்ல வருவாயுமுள்ள ஒரு வழக்கறிஞர் பொதுப் பணத்தைத் தம்மிடம் வைத்துக் கொள்ளாமல், பொது பாங்கியில் போட்டுக் கணக்கும் வெளியிட்டுள்ளார்.

இரண்டாவது கடிதத்தின் கடைசியில், பண உதவி செய்யுமாறு சேலம் வாசிகளை அழைப்பதுடன், கையெழுத்திட்டுவிட்டுப் பணம் கொடுக்காதிருப்பவர்களைப் பற்றி ராஜாஜி அவர்கள் கூறியிருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

ராஜாஜி அவர்களின் மூன்றாவது கடிதம் மிகவும் சுவாரஸ்யமானது. அது, '**தென்னாப்பிரிக்க இந்தியர்களுக்கு உதவி — சேலம்**' என்ற தலைப்பில் வெளிவந்தது. [அந்தக் கடிதத்தின் வாசகம் வருமாறு :

## மூன்றாவது கடிதம்*

இந்நகரில் [சென்ற சனிக்கிழமை இரவு மிஸ்டர் டி. எஸ். சாமாவய்யர் நாடகக் கம்பெனியின் கடைசி நாடகம் நடந்தது. 'அரிச்சந்திர விலாசம் மயான காண்டம்' ஆட்டம் முடிந்தபின், இக்கம்பெனியார் சில நாளுக்கு முன் ஒரு இராத்திரி வரும்படி முழுமையும் — சுமார் முந்நூறு ரூபாய் — தென்னாப்பிரிக்க இந்தியர்களுக்குக் கொடுத்து விட்டதன் ஞாபகார்த்தம் சேலம் பொதுஜனங்களுக்காக மிஸ்டர் டாக்டர் நாராயணய்யர், கம்பெனி சாமாவய்யருக்கு ஒரு தங்கப் பதக்கம் வெகுமதி கொடுத்தார். தென்னாப்பிரிக்காவில் நம் சகோதரர்களும் சகோதரிகளும் படும்பாடும் இருக்கும் நிலைமையையும் மனத்தில் வைத்திருப்பவர்கள் இந்நாடகத்தைப் பார்க்கும் போது அவர்களுக்குத் தோன்றுவது யாதெனில், தர்மத்திலும் வீரத்திலும் பல ஆண்டுகளுக்குமுன் இத்தேசத்தை ஆண்ட அரிச்சந்திரனுக்கும் சந்திரமதிக்கும் சமானராய் இக்கலிகாலத்தில் மோகனதாஸ் காந்தியும் கீர்த்தி பெற்ற அவர் மனைவியும் அவதரித்தார்களல்லவோ ?

1896ம் வருஷத்தில் இருபத்தேழு வயது வாலிபரான இவர் தம் மனைவியையும், குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு தென்னாப்பிரிக்க இந்தியர்களின் கோரிக்கைப்படி கப்பலேறி நேட்டாலுக்குப் போனபோது இவர் வரும் சங்கதி அறிந்து 3300 வெள்ளையர்கள் கப்பலிறங்குமிடத்தில் கலகசன்னாகமாய்க் கூட்டம் கூடிக் கப்பலிலிருந்து இறங்காதபடி பயமுறுத்தி நிற்பதை லட்சியம் பண்ணாமல் மனைவி குழந்தைகளுடன் சத்தியத்தையும் தம் நாட்டின் கீர்த்தியையுமே முன்னிட்டுக் கொண்டு அஞ்சாமல் கப்பலிலிருந்து இறங்கிக் கரையேறி வெள்ளையர் மத்தியில் சென்ற இக்காந்தியாருக்குச் சமானமாக யாரை எடுத்துச் சொல்லலாம்! பிரஹலாதனும் அரிச்சந்திரனும் தவிர வேறு யார் ?

தன் மனைவிக்குக் கொடூரமான வியாதி சம்பவித்து அபாயமாய் இருக்கும் செய்தி தந்தி மூலமாய் வந்தும், அபராதத்தைக் கொடுத்துவிட்டு மீட்டுக் கொள்ளாமல், மற்ற இந்தியர்கள் ஜெயிலிலிருப்பதால் தாமும் சிறைச்சாலையிலேயே இருந்தவரும், பூரிபந்தர் இராஜாவின் பிரதான மந்திரிகளின் பௌத்திரனும் புத்திரனும், தென்னாப்பிரிக்காவில் பதினைந்து வருஷம் பாரிஸ்டராகவுமிருந்த இவர், கேவலம் திருடர் கொலை பாதகர் போல் ஜெயிலுடுப்பு தரித்து ரோட்டுகளில் வேலை செய்தும், ஒரு ஊர் சிறைச்சாலையிலிருந்து மற்றொரு ஊர் சிறைச்சாலைக்குக் கால்நடையாய் நடந்தும், ஜெயிலில் குற்றவாளிகளுடைய கக்கூஸ்களைத் தன் கையினால் கழுவினார் அல்லவா !

* 'சுதேசமித்திரன்' 19—12—1913 பக்கம் 7.

இவருடைய மனைவியின் சரித்திரத்தை அறிந்தவர் இக்கலிகாலத்திலும் இப்பேர்ப்பட்ட பூரண பதிவிரதை உண்டா என்று பிரமிப்பர். சந்திரமதிக்கு ஒப்பான இவர் சென்ற செப்டம்பர் மாதத்தில் இந்திய ஸ்திரீகளுக்கு அவமானமாக ஏற்பட்ட அநியாய சங்கடங்களை வெறுத்து ஜெயிலுக்குப் போனார். நாடகத்தில் மகனை மயானத்துக்குக் கொண்டு போய்த் தகனம் செய்ய எத்தனித்ததில் கால் பணம் கொடுக்காமல் கிரியை செய்யக்கூடாது என்று சந்திரமதி தடுக்கப்பட்ட போது நிருபருக்கு ''மூன்று பவுன் வரி'' ஞாபகம் வந்தது. கொடுமையில் எந்த வரி பெரிதென்று சொல்வது அரிது. ஸ்ரீ காந்தியும் அவர் பத்தினியும் இந்நாட்டில் அரிச்சந்திரன் சந்திரமதி போல் என்றைக்கும் புகழ்பெற்று ஜனங்களின் பக்தியில் சிரஞ்சீவிகளாயிருப்பார்கள். —''ஸி. ஆர்.''

மயானத்தில் கால் பணம் வரியையும், தென்னாப்பிரிக்காவில் மூன்று பவுன் தலை வரியையும் குறிப்பிட்டு, ''கொடுமையில் எந்த வரி பெரிதென்று சொல்வது அரிது'' என்று கூறும் பொழுது, ராஜாஜி அவர்களின் தனி முத்திரையைக் காண்கின்றோம்.

ராஜாஜி அவர்கள் தம்மைப் பற்றி ஒன்றுமே எழுதுவதில்லை என்பது பலருடைய நியாயமான குறை. ஆனால் அதிர்ஷ்டவசமாக 1948ஆம் ஆண்டில், காந்தியடிகள் மறைவுக்குப் பின்பு, ராஜாஜி அவர்கள், ''அக்டோபர் இரண்டாந் தேதி'' என்ற அரிய கட்டுரை எழுதியுள்ளார்கள். அதிலிருந்து சில பகுதிகளை இந்தக் காந்திஜி நூற்றாண்டில் மகிழ்ச்சியுடன் இங்கு தருகிறேன்:

## அக்டோபர் இரண்டாந்தேதி

''என்னைப் பற்றிச் சில விஷயங்கள் கூற விரும்புகின்றேன். சுதந்திரம் அடைவதற்கு ஆயுதமேந்திப் புரட்சி செய்வதைத் தவிர வேறு வழி கிடையாது என்றே நான் அரசியல் வாழ்க்கையில் புகுந்த போது எண்ணினேன். என்னைப் போலவேதான் அந்தக் காலத்திலிருந்த அறிஞர்கள் எல்லோரும் எண்ணினார்கள். ஆனால் போர் முறை அதிகமாக முன்னேற்றம் அடைந்து விட்டபடியால் அதைக் கையாள்வது என்பது அசாத்தியமான காரியம் என்பதையும் நாங்கள் உணர்ந்திருந்தோம்.' ஆகவே, போர் தொடுத்துச் சுதந்திரம் பெற முடியாது என்பதை உணரவே, நாங்கள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தோம்.

''அந்தச் சமயத்தில் வெடிகுண்டு செய்யும் வித்தை இந்திய நாட்டுக்கு வந்து சேர்ந்தது. அதை எறிவது என்பதைப் போர் செய்வது என்று கூற முடியாது. வெறும் பயமுறுத்தல் முறையே தவிர வேறன்று. ரகசியச் சங்கங்கள் அமைத்து, வெடிகுண்டுகள் தயாரித்து, இருபது முப்பது நபர்கள் மீது எறிந்து, கொன்று அதன் மூலம் அரசாங்கத்தைப் பயமுறுத்தி விட்டால் அந்நியர்கள் நாட்டை விட்டு ஓடிவிடுவார்கள் என்று நம்பினார்கள். ஆனால் இரண்டொரு வெள்ளையர் இறந்து போவதால் சுதந்திரம் சித்தியாகப் போவதில்லை என்பதை மக்கள் வெகு சீக்கிரத்தில் அறிந்து கொண்டார்கள். இருபது, முப்பது நபர்களைக் கொன்று விட்டால்கூட, அவர்கள் ஸ்தானங்களை வகிக்க ஏராளமான வெள்ளையர்கள் வரத் தயங்கமாட்டார்கள். அப்படி வருகிறவர்கள் அதிக மன உறுதியும், பழி வாங்கும் தன்மையும் படைத்தவர்களாக இருப்பார்கள். இதை உணர்ந்ததும் மக்கள் என்ன செய்வது என்று வழி தோன்றாமல் அப்படியே ஸ்தம்பித்துப் போய் விட்டார்கள்.

''ஒருநாள் நண்பர் ஒருவர் வீட்டில் கழிவுக் காகிதங்கள் போடும் கூடையில் ஒரு சிறு புஸ்தகத்தைக் கண்டேன். அது தோரோ என்னும் அமெரிக்கர் எழுதிய ''சாத்விகச் சட்ட மறுப்பு'' என்னும் நூலாக இருந்தது. அதைப் படித்தேன். வெகு சுவையுடையதாக இருந்தது. என் கண்கள் திறக்கப் பட்டன. அதே சமயத்தில் காந்தியடிகள் தென் ஆப்பிரிக்காவில்செய்து வந்த காரியங்கள் பத்திரிகைகளில் வெளி வரலாயின. அவர் தோரோவின் தத்துவங்களையும், டால்ஸ்டாயின் தத்துவங்களையும் இந்திய அரசியலில் எப்படிக் கையாளலாம் என்பதைக் கண்டு பிடித்து விட்டார். நாம் சம்மதிக்கா விட்டால் அந்நியர் நம்மை ஆள முடியாது என்னும் உண்மையை அவர் கண்டு பிடித்து விட்டார். நாம் சம்மதிக்க மாட்டோம் என்று சொல்லி விட்டால், அந்தக் கணமே அரசாங்கம் முறிந்து போக வேண்டியதேயாகும். தென் ஆப்பிரிக்காவில் அவர் நடத்திய போராட்டத்தைப் பற்றி வாசித்ததும், அதே ஆயுதத்தை ஏந்தினால், இந்தியாவும் வெற்றிபெற்றுவிடலாம் என்பதை உணர்ந்தோம்.



''ஒரு சமயம் நான் கர்நூலில் நடைபெற்ற ஒரு மகாநாட்டுக்குப் போயிருந்தேன். அப்போது தென்னாப்பிரிக்காவிலிருந்து நாடு கடத்தப்பட்டவர்களில் பலர் வந்திருந்தார்கள். அவர்களுக்கு இந்த நாட்டில் வீடு, வாசல் கிடையாது. தென் ஆப்பிரிக்காப் போராட்டத்துக்கு ஆதரவு தேடும் பொருட்டு அவர்கள் இந்தியா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். நான் கர்நூலில் அவர்களில் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தேன். மகாத்மாஜி ஒரு நூல் எழுதியிருப்பதாகவும், அந்தப் புஸ்தகத்தை வெளியிடுவதைத் தென் ஆப்பிரிக்க அரசாங்கம் தடுத்திருப்பதாகவும் சொன்னார். பின்னர் அவர் அச்சிறு நூலின் பிரதியொன்றை எனக்கு அனுப்பி வைத்தார். நான் அதை மிகுந்த ஆவலோடு வாசித்தேன். அது மறுபடியும் வெளியிடப் பட்டிருக்கிறது. எங்கும் கிடைக்கும்.

''அந்த நூலை மகாத்மாஜி கோக்கலேயிடம் காட்டினார். கோக்கலே அதைப் படித்து

முடித்ததும் கோக்கலேயிடம் மகாத்மாஜி அதைப் பற்றித் தங்கள் கருத்து யாது என்று கேட்டாராம். கோக்கலே உடனே, ''என் கருத்தா ! அதை உடனே அராபிக் கடலில் எறிந்துவிட வேண்டும்'' என்று கூறினாராம். இந்த விவரத்தை மகாத்மாஜியே என்னிடம் கூறினார்.

''மகாத்மாஜிக்கு உதவி செய்வதற்காகவே கோக்கலே தென்ஆப்பிரிக்காவுக்குப் போயிருந்தார். மகாத்மாஜியும் அவரைக் குருவாகவே கொண்டாடினார். 'இது நல்ல புஸ்தகம் தான். ஆனால் இக்காலத்துக்கு உபயோகப்படாது' என்பது அவருடைய அபிப்பிராயம். அதற்குக் காரணம் அவர் தற்கால நவீன நாகரிகத்திலும் முன்னேற்றத்திலும் யந்திரங்கள் முதலிய சாதனங்களிலும் நம்பிக்கை பெற்றிருந்ததுதான். ஆனால் அந்த நூலோ, 'போதும் இந்த நாகரிகம், முன் போல் எளிய வாழ்க்கை வாழ்வதே சுகம் தரும்' என்று கூறுவதாயிருந்தது.

''மகாத்மா காந்தியடிகள் இந்தத் தமது 'ஹிந்த் ஸ்வராஜ்' என்னும் சிறு நூலை வெளியிட்ட சமயத்தில்தான் தென் ஆப்பிரிக்காவில் தமது சாத்விகப் போரை நடத்திக் கொண்டிருந்தார். அதை அவர் முற்றிலும் அஹிம்சா முறையிலேயே நடத்தினார். இந்தியாவில் வெடிகுண்டு எறிவதிலும், சதியாலோசனைச் சங்கங்கள் அமைப்பதிலும் ஈடுபட்டிருந்த புரட்சிக்காரர்கள், 'மகாத்மா உலகை ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்; அவரும் வெகு சீக்கிரத்தில் நம்முடைய கட்சியில் வந்து சேர்ந்து கொள்வார்' என்று எண்ணினார்கள். இந்தப் புரட்சிக் கட்சி இந்தியாவில் மட்டுமின்றி ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் வேலை செய்து கொண்டிருந்தது. அந்தக் கட்சியார் எப்பொழுதும் காந்தியடிகளைத் தங்களில் ஒருவராகவே கருதி வந்தார்கள். அவர் தங்களுடன் சேர்ந்து தலைமை தாங்கும் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவர்களுடைய இந்த எண்ணத்துக்குக் காரணம் யாது ?

''மிதவாதத் தலைவர்கள் கோழைகளாயிருந்தார்கள். காந்தியடிகளோ எதைச் செய்தாலும், எதைப் பேசினாலும் அச்சமின்மையே பிரதானமாக விளங்கிற்று. அவர் ஆங்கிலேயரை உயர்ந்தவர்களாகக் கருதவில்லை. அத்துடன் அச்சமில்லாமல் அவர்களை எதிர்க்க வேண்டும் என்றும் சொன்னார். அதனால் புரட்சிக் கட்சியார், ''ஆகா, இத்தகையவர்தான் நமக்குத் தேவை'' என்று தங்களுக்குள் கூறிக் கொண்டார்கள். மிதவாதிகள் அவர்களைத் தேசத்தின் விரோதிகள் என்று கண்டித்தார்கள். ஆனால் காந்தியடிகளோ எப்போதும் அவர்களுடைய தேச பக்தியையும், தைரியத்தையும் பாராட்டினார். ஆதலால் அவர்கள், ''நம்மை அறிபவர் இவர்தான், இறுதியில் நம்முடன் வந்து சேர்ந்து கொள்ளவே செய்வார்'' என்று எண்ணினார்கள்.

''இந்த மாதிரிதான் அவர்கள் எண்ணிக் கொண்டிருந்தார்கள் என்பதற்கு ஒரு சிறு உதாரணம் கூறுகிறேன். 1912ஆம் வருஷத்தில் ஒரு நபர் இந்தியாவுக்கு வந்தார். அவர் தம்முடைய நண்பர் ஒருவருடன் சேலத்துக்கும் வந்தார். அவர் அப்போது ஒரு சிறு வாலிபர். அவரை நான் சந்தித்தேன். வந்த நபருக்கு லண்டன் நகரிலிருந்த சில இந்தியப் புரட்சிக்காரர்களுடைய பழக்கம் உண்டு. நாங்கள் அரசியல் விஷயங்களைப் பற்றியும், புரட்சிக்காரர்களுக்கு வெற்றி கிடைக்குமா என்னும் விஷயத்தைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். எங்களுடைய விருந்தவர் ஒருவர், ''இனி அவர்கள்பாடு தீர்ந்ததுதான், அவர்கள் அனைவரையும் நசுக்கி விட்டார்களே'' என்றார். அதற்கு உடனே வந்த நபர், ''அப்படி எண்ண வேண்டாம், காந்தியடிகள் இந்தியாவுக்கு வந்து சேரும் வரை பொறுத்துப் பாருங்கள்'' என்று கூறினார். நானும்கூட அப்பொழுது அவ்விதம் எண்ணவில்லை என்று கூற முடியாது. ஹிம்ஸையை உபயோகிப்பது தவறு என்பதில் எனக்கு அப்பொழுது உறுதியான நம்பிக்கை உண்டாகவில்லை. காந்தியடிகளையும் புரட்சிக்காரர்களுடன் சேர்ந்து கொள்ளும்படி செய்ய முடியும் என்றே நானும் நம்பினேன்.

''அதன்பின்னர் தென் ஆப்பிரிக்காவில் காந்தியடிகள் சிறையில் அனுபவித்தவைகளை 'மாடர்ன் ரெவ்யூ' என்னும் மாத சஞ்சிகையில் படித்தேன். அவர் தென்னாப்பிரிக்காவிலிருந்த போது மூன்று தரம் சிறைப்பட்டிருக்கிறார். அவருடைய சிறை அநுபவங்கள் மிகுந்த சுவை உடையன. அந்தக் காலத்தில் அரசியல்வாதிகளில் அநேகர் அவற்றைப் படிக்கவில்லை. ஆனால் நானோ அவற்றில் என் மனத்தைப் பறிகொடுத்து விட்டேன். அதனால்தான் நான் பின்னர் என் சொந்தச் செலவில் அந்தக் கட்டுரைகளைத் தமிழ்ப் புத்தகமாகப் பிரசுரித்தேன். அந்தச் சிறை அநுபவங்களைப் படித்த பிறகு, இனி காந்தியடிகளை ஹிம்சையைக் கையாளச் செய்வது என்பது முடியாத காரியம் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டேன்.

''இந்தியாவில் இருந்த அரசியல்வாதிகள் அனைவரும் யாதொரு கட்சி பேதமின்றி காந்தியடிகள் தென் ஆப்பிரிக்காவில் நடத்திய போராட்டத்தைப் புகழ்ந்து பாராட்டினார்கள். ஆயினும் காந்தியடிகள் அங்கு கையாண்ட முறைகளை இந்தியாவிலும் கையாளலாம் என்ற நம்பிக்கை மட்டும் அவர்களிடம் கிடையாது. தென் ஆப்பிரிக்காவிலிருந்த ஆங்கிலப் பாதிரியார் டோக் என்பவர் காந்தியடிகளுடைய ஜீவிய சரிதையை எழுதியிருக்கிறார். தென் ஆப்பிரிக்காத் தொடர்புடைய பாதிரியார் ஒருவர் சேலத்தில் இருந்தார். அவர் இந்த ஜீவிய சரிதையின் பிரதி ஒன்றை எனக்குப் படிக்கக் கொடுத்தார். அது மிகுந்த சுவையுடையதாக இருந்தது. மகாத்மாவின் உள்ளக் கருத்து முழுவதையும் தெள்ளத் தெளிய எனக்கு விளக்கிற்று. அதன்பின் என் மனத்தில் எத்தகைய சந்தேகம்கூடத் தங்கியிருக்கவில்லை. இப்பொழுது அவரை அறிந்திருப்பது போலவே, அப்பொழுதும் அவரை அறிந்து கொண்டேன்.''





### கடந்தகால நினைவும் எதிர்காலச் சிந்தனையும்

லண்டனில் திலகர் தங்கி இருந்த கட்டடத்தின் வாயிலில் பதிக்கப்பட்டுள்ள செப்பேட்டினைப் படிக்கிறார்.

அணு ஆயுதப் பரிசோதனைகளின் காரணமாகப் பன்னிரண்டரை லட்சம் குழந்தைகள் இறந்தோ அல்லது ஊனமடைந்தோ பிறக்கும் என்று அறிவிக்கும் சுவரொட்டி விளம்பரத்தை அமெரிக்காவில் பார்வையிடுகிறார்.

## முத்து மாலை

ராஜாஜி அவர்களின் முத்து முத்தான குணாதிசயங்கள் பலவற்றை உணர்த்துகின்றன, இந்தப் புகைப்படங்கள்.



### கொளுத்தும் வெயிலும் குடைநிழலும்

கோவில்பட்டி (பாரதி மணிமண்டபத் திறப்பு விழாவின் போது) ரயில் நிலையத்தில் மக்களின் அன்பைப் பெறுபவர், கவர்னர் ஜெனரல் என்ற முறையில் பரோடாவில் ராணுவ மரியாதையை ஏற்கிறார்.





## பறக்கும் முன்னரும் பறந்த பின்னரும்

□

விமானத்தில் ஏறுவதற்குமுன் எடை பார்த்துக் கொள்ளும் ராஜாஜி விமானத்தை விட்டு இறங்கும் போது நிதானம் காட்டுகிறார்.







## படிப்பும் எழுத்தும்

நாளிதழ்களை ஆழ்ந்து படிப்பவர் நாள்தோறும் கடிதங்களுக்குப் பதில் எழுதுகிறார்



## கௌரவப் பட்டமும் கௌரவப்படுத்தலும்

கௌரவப் பட்டம் பெற அங்கி அணிந்திருப்பவர் கோகலே படத்தைத் திறந்து வைத்துக் கௌரவிக்கிறார்.







## உழைப்பும், ஓய்வும்

கவர்னர் ஜெனரலானாலும் சரீர உழைப்பை மறக்கக் கூடாது என்று உணர்த்துபவர், உழைத்தவருக்கு ஓய்வுபெறும் உரிமையும் உண்டு என்கிறார்.



## கலைகளை மறவாத் தலைவர்

கட்டடக் கலையின் சிறந்ததை ரசித்தவர் நடனக் கலையின் சிறப்பைக் காக்கும் கலாக்ஷேத்திரத்துக்கும் விஜயம் செய்கிறார்.







**இளஞ்செடியும் கைத்தறியும்**

வன மகோற்சவத்துக்கு ஊக்கமளிப்பவர், கைத்தறியாளரின் அன்பையும் பெற்றவர்.





**மலைமுகடும்**
**மதலைகளின் மனமும்**

மலைமுகட்டின் எழிலில் லயிப்பவர் கவர்னர் ஜெனரல் மாளிகையில் மதலைகளின் உள்ளங்களிலும் உறைகிறார்.



# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

அத்தியாயம் பத்து

## சூடாமணி விஹாரம்

**பூ**ம்புகார் என்னும் காவிரிப்பட்டினத்தைக் கடல் கொள்ளை கொண்டு போய் விட்டது அல்லவா? அதற்குப் பிறகு சோழ வள நாட்டின் முக்கிய துறைமுகப்பட்டினம் என்ற அந்தஸ்தை நாகப்பட்டினம் நாளடைவில் அடைந்தது. பொன்னி நதி பாய்ந்து இயற்கை வளம் செறிந்திருந்த சோழ நாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள எத்தனையோ அயல் நாட்டார் ஆவல் கொண்டிருந்தனர். பெரிய பெரிய மரக்கலங்களிலே வர்த்தகப் பண்டங்கள் வந்து இறங்கியபடி இருந்தன. முத்தும் மணியும் வைரமும் வாசனைத் திரவியங்களும் கப்பல்களில் வந்து இறங்கியதோடு அரபு நாட்டுக் குதிரைகளும் விற்பனைக்காக வந்து இறங்கின.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரின் காலத்தில் நாகப்பட்டினம் சிறந்த மணிமாட நகரமாயிருந்தது. அந்த நகரத்தைக் கண்ட நம்பி ஆரூரர்,

"காண்பினிய மணிமாடம் நிறைந்த
நெடு வீதிக்
கடல்நாகைக் காரோணம்
மேவி யிருந்தீரே!"

என்று வர்ணித்தார். கடல் நாகைக் காரோணத்தில் மேவியிருந்த காயாரோகணப் பெருமானிடம் ஸ்ரீ சுந்தர மூர்த்தி நாயனார் என்ன பொருள்கள் வேண்டுமென்று கேட்டார் தெரியுமா? மற்ற ஊர்களிலே போலப் பொன்னும் மணியும் ஆடை ஆபரணங்களும் கேட்டதோடு நாகப்பட்டினத்திலே ஓர் உயர்ந்த சாதிக் குதிரையும் கேட்டுப் பெற்றுக் கொண்டார்!

"நம்பிதாமும் அந்நாட்போய்
நாகைக் காரோணம் பாடி
அம்பொன் மணிப்பூண் நவமணிகள்
ஆடை சாந்தம் அடற் பரிமா"

ஆகியவை பெற்றுக் கொண்டு திருவாரூர் திரும்பிச் சென்றதாகப் பெரிய புராணம் கூறுகிறது.

நாகப்பட்டினத் துறை முகத்தில் வந்து இறங்கிய அரபு நாட்டுக் குதிரை ஏறிச் சவாரி செய்ய வேண்டும் என்று தோன்றி விட்டது போலும்!

**நா**கப்பட்டினத்தைப் பற்றிப் புராணம் வர்ணிப்பது ஒருபுறமிருக்க, சரித்திர பூர்வமான கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அந்நகரத்தைப் பற்றிச் சொல்லியிருக்கின்றன.

"பல கோயில்களும் சத்திரங்களும் நீர்நிலைகளும் சோலைகளும் மாடமாளிகைகளும் நிறைந்த வீதிகளையுடைய நாகைப் பட்டினம்" என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்த நகரை வர்ணிக்கின்றன.

அதே ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்நாளில் நாகப்பட்டினத்தில் புகழ் பெற்று விளங்கிய சூடாமணி விஹாரம் என்னும் பௌத்த ஆலயத்தைப் பற்றியும் அதன்வரலாற்றையும் கூறுகின்றன.

* * *

மலாய் நாடு என்று இந்நாளில் நாம் குறிப்பிடும் தீபகற்பம் அக்காலத்தில் ஸ்ரீ விஜயநாடு என்னும் பெயரால் பிரசித்தி பெற்றிருந்தது. அந்த நாட்டில் ஒரு முக்கிய நகரம் கடாரம். அந்த மாநகரைத் தலைநகரமாக வைத்துக் கொண்டு நாலா திசையிலும் பரவியிருந்த மாபெரும் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தை நெடுங்காலம் ஆண்டு வந்தவர்கள் சைலேந்திர வம்சத்தார். அந்த வம்சத்தில்



மகரத்வஜன் சூடாமணி வர்மன் என்னும் மன்னன் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கினான். அவ்வரசன், ''இராஜ தந்திரங்களில் நிபுணன்; ஞானத்தில் ஸுர குருவான பிரகஸ்பதியை ஒத்தவன்; அறிவாளிகளான தாமரை மலர்களுக்குச் சூரியன் போன்றவன்; இரவலருக்குக் கற்பகத் தருவாய் விளங்கினான்'' என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் வியந்து புகழ்ந்து கூறுகின்றன.

அத்தகைய பேரரசனின் மகன் மாற விஜயோத்துங்க வர்மன் என்பவன் தன் தந்தையின் திருநாமம் நின்று நிலவும்படியாக, ''மேரு மலையை யொத்த சூடாமணி விஹாரத்தை நாகைப் பட்டினத்தில் கட்டினான்'' என்றும் அச் செப்பேடுகள் கூறுகின்றன.

* * *

கடாரத்து அரசனாகிய மாற விஜயோத்துங்கன் நாகப்பட்டினத்துக்கு வந்து புத்த விஹாரத்தைக் கட்டுவானேன் என்று வாசகர்கள் கேட்கலாம்.

சோழ வள நாட்டுடன் நீடித்த வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த அயல் நாடுகளில் ஒன்று ஸ்ரீ விஜயநாடு. அந்நாட்டுப் பிரஜைகள் பலர் நாகப்பட்டினத்துக்கு வந்து நிரந்தரமாகவே குடியேறியிருந்தனர். வேறு பலர் அடிக்கடி வந்து திரும்பினர். கடாரத்து அரசனும் அவனுடைய குடிகளும் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் புத்தரை வழிபடுவதற்கு வசதியாயிருக்கட்டும் என்றுதான் அம்மன்னன் நாகப்பட்டினத்தில் சூடாமணி விஹாரத்தைக் கட்டினான். புத்த மதத்தின் தாயகம் பாரத தேசமாயிற்றே என்ற காரணமும் அவன் மனத்தில் இருந்திருக்கலாம்.

தமிழகத்து மன்னர்கள் எக்காலத்திலும் சமய சமரசத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகையால் அவர்கள் நாகப்பட்டினத்தில் சூடாமணி விஹாரம் கட்டுவதற்கு அநுமதி கொடுத்தார்கள். அநுமதி கொடுத்தது மட்டுமா? அவ்வப்போது அந்தப் புத்தர் கோயிலுக்கு நிவந்தங்களும் இறையிலி நிலங்களும் அளித்து உதவினார்கள்.*



*இந்தக் கதை நடந்த காலத்திற்குப் பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் நாகப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு ஆனைமங்கலம் கிராமத்தையும் அதைச் சார்ந்த பல ஊர்களையும் முற்றூட்டாக அதாவது எந்தவிதமான வரியும் விதிக்கப்படாத இறையிலி நிலமாகத் தானம் அளித்தான். இந்த நில தானத்தை இராஜராஜனுடைய குமாரன், சரித்திரப் புகழ்பெற்ற இராஜேந்திர சோழன், -- செப்பேடுகளில் எழுதுவித்து உறுதிப்படுத்தினான். இவைதாம் ஆனைமங்கலச் செப்பேடுகள் என்று கூறப்படுகின்றன. மொத்தம் இருபத்தொரு செப்பேட்டு இதழ்கள். ஒவ்வொன்றும் பதினான்கு அங்குல நீளமும் ஐந்து அங்குல அகலமும் உள்ளனவாம். ஒரு பெரிய செப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன. இச்செப்பேடுகள் சமீபகாலத்தில் கப்பல் ஏறிக் கடல் கடந்து சென்று ஐரோப்பாவில் ஹாலந்து தேசத்தில் உள்ள லெயிடன் என்னும் நகரத்தின் காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன! ஆகையினால் இச்செப்பேடுகளை 'லெயிடன் சாஸனம்' என்றும் சில சரித்திர ஆராய்ச்சியாளர் குறிப்பிடுவதுண்டு.

விஜயாலயசோழரின் காலத்திலிருந்து சோழ மன்னர்கள் சிவபக்தியில் திளைத்த வர்களாயிருந்தார்கள். ஆதித்த சோழ ரும் பராந்தக சோழரும் கண்டராதித்த ரும் சைவப் பற்று மிக்கவர்கள். பற்பல சிவாலயத் திருப்பணிகள் செய்வித் தார்கள். எனினும் அவர்கள் பிற மதங் களைத் துவேஷிக்க வில்லை. தங்கள் இராஜ்யத்தில் வாழும் பிரஜைகள் எந்தெந்த மதத்தைச் சேர்ந்தவர்களா யினும் அவர்களையும் அவர்களுடைய மதங்களையும் நடு நிலைமை தவறாமல் பராமரித்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது முன்னோர்களைக் காட்டிலும் சில படிகள் முன் சென்றார். புத்தப் பள்ளிகளுக்கு விசேஷ சலு கைகள் அளித்தார். இதனால் சோழ சாம்ராஜ்யத்தில் அச்சமயம் வாழ்ந் திருந்த பௌத்தர்கள் அனைவரும் மிக்க உற்சாகம் கொண்டிருந்தார்கள். இலங்கையில் அருள்மொழி வர்மர் இடிந்து போன புத்த விஹாரங்களைப் புதுப்பிக்கும்படி ஏற்பாடு செய்தது அவர்களுடைய உற்சாகத்தை மேலும் அதிகமாக்கி யிருந்தது.

அப்படி யெல்லா மிருக்க, இன்று அந்தப் பெயர் பெற்ற சூடாமணி விஹாரத்தில் நேர்ந்த குழப்பத்துக்குக் காரணம் என்ன? பிக்ஷுக்கள் நிலை கொள்ளாமல் அங்கு மிங்கும் பரபரப் பாக ஏன் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்? சூடாமணி விஹாரத்தின் வாசற்புறத் தில் என்ன அவ்வளவு இரைச்சலும் கூக்குரலும்? — நல்லது; நாமும் சேந் தன் அமுதனைப் பின்பற்றிச் சென்று பார்ப்போம்.

* * *

சேந்தன் அமுதனும் மற்ற இருவ ரும் கால்வாய் வழியாகப் படகைச் செலுத்திக் கொண்டு சூடாமணி விஹா ரத்தின் உட் பகுதிக்கே வந்து விட்டதா கச் சொன்னோம். அங்கே ஒருவரையும் காணாமையால் சேந்தன் அமுதன் தட் டுத் தடுமாறி வழி தேடிக்கொண்டு, விஹாரத்தின் வாசற் பக்கம் போய்ச் சேர்ந்தான். அங்கேதான் பொது மக்கள் வந்து வழிபடுவதற்குரிய புத்தர் பெருமானின் சைத்யம் என் னும் கோயில் இருந்தது. பக்தர்கள் பலர் அந்தக் காலை நேரத்தில் தாமரை மலர்களும் செண்பகப் பூக்களும் மற்ற பூஜா திரவியங்களும் நிறைந்த தட்டு களை ஏந்திக் கொண்டு வந்திருந்தார்கள். ஆனால் வந்த காரியத்தை அவர்கள் மறந்து விட்டதாகத் தோன்றியது. சைத்யத்தில் ஏறுவதற்குரிய படிகளில் பிக்ஷுக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கிக் கீழே நின்றவன் ஒருவன் ஏதோ சொல்லிக் கொண்டிருப் பதைச் சேந்தன் அமுதன் கண்டான். பிக்ஷுக்கள் சிலருடைய கண்களில் கண் ணீர் ததும்பி நிற்பதையும் பார்த்தான். கீழே நின்ற பக்தர்களில் பலர் வழக்கப் படி "சாது! சாது!" என்று கோஷிப் பதற்குப் பதிலாக, "ஆஹா!" "அடடா!" "ஐயோ!" என்று அங்க லாய்த்துக் கொண்டிருப்பதையும் கவ னித்தான்.

அருகில் நெருங்கிச் சென்று சிறிது நேரம் கேட்ட பின்னர் விஷயம் இன் னது என்று தெரிந்தது. பிக்ஷுக்களிடம் பேசிக் கொண்டிருந்தவன் பார்த்தி பேந்திரனுடைய கப்பலில் இருந்த மாலுமிகளில் ஒருவன். கப்பல் முதல் நாள் இரவு நாகப்பட்டினத்துக்கு வந்துவிட்டது. மாலுமிகள் கரையில் இறங்கியதுமே இளவரசரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்தியைச் சிலரிடம் சொல்ல, அது நகரமெல்லாம் பரவிவிட்டது. அச் செய்தி உண்மை தானா என்று அறிய அதிகாலையில் அம் மாலுமிகளில் ஒருவனைச் சூடாமணி விஹாரத்தின் பிரதம பிக்ஷு அழைத்து வரச் செய்தார். அவன் தான் அறிந் ததை அறிந்தபடி கூறினான். "சுழற் காற்று அடித்தபோது இளவரசர் கட லிலே குதித்தவர் திரும்பி வரவே யில்லை" என்று துயரக் குரலிலே சொன்னான். அப்போது அக்கூட்டத் தில் விம்மி அழும் குரல்கள் பல எழுந்தன.

பிரதம பிக்ஷுவின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகித் தாரை தாரையாக வழிந்தது.

அவர் குனிந்த தலை நிமிராமல் படிகளில் ஏறிச் சென்று சைத்யத்தைத் தாண்டி விஹாரத்துக்குள் பிரவேசித் தார். மற்ற பிக்ஷுக்களும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள். சேந்தன் அமுதனும் அவர்களோடு வந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை.

பிரதம பிக்ஷு மற்றவர்களைப் பார்த் துச் சொன்னார்: "புத்த பகவானின் கருணை இப்படியா இருந்தது? பற்பல மனக் கோட்டைகள் கட்டிக் கொண் டிருந்தேனே? சக்கரவர்த்தியைப் பார்க் கச் சமீபத்திலே தஞ்சாவூருக்குப் போயிருந்தேன், பாருங்கள்! அச்சம யம் இலங்கையில் அருள்மொழி வர் மரின் அற்புதச் செயல்களைப் பற்றிக் கூறினேன். அதையெல்லாம் இளைய பிராட்டி குந்தவை தேவியும் கேட் டுக் கொண்டிருந்தார். பிறகு தனியாக வரவழைத்து இந்த விஹாரத்தை யொட்டி ஆதுர சாலை ஒன்று ஏற் படுத்த வேண்டும் என்றும் அதற்குத்

# உங்கள் கண்களுக்கு இதமான ஒளி தேவை!

உங்கள் இல்லத்தில், தேவைக்கேற்றபடி சீரான ஒளியைத் தருவதற்கு பலதரப்பட்ட பிலிப்ஸ் லாம்புகள் இருக்கின்றன. உதாரணமாக, பிலிப்ஸ் கிளியர் லாம்புகள் மற்றும் ஆர்ஜண்டா லாம்புகள் உள்ளன. கண்கூசாத இதமான ஒளி தேவைப்படும் வேலைகளுக்கு—அதாவது, படிப்பு, வீட்டுவேலை அல்லது தையல் வேலைக்கு—பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் சிறந்தவை. வீடுகளில், கண்கூசாத இதமான ஒளி அவசியம் என்பதைக் கருதியே இந்த லாம்புகள் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. ஒளியை ஒரே சீராகப் பரப்பும் பொருட்டு பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகளில் ஒரு விசேஷ வெள்ளைப் பூச்சு பூசப்பட்டிருக்கிறது. இதனால் கண்கள் கூசாமல் வெளிச்சம் ஒரே சீராகப் பரவும். ஆகவே, சிறியவர் முதல் பெரியவர் வரை, குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் ஏற்ற லாம்புகள் இவை!

பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் 40, 60 மற்றும் 100 வாட்டுகளில் கிடைக்கின்றன.

கிளியர் லாம்புகள், அலங்கார லாம்புகள், டார்ச் மற்றும் டயல் லாம்புகள், TL ப்ளூரசண்ட் லாம்புகள், மெர்குரி வேபர் லாம்புகள் போன்றவற்றை பிலிப்ஸ் இந்தியாவிலேயே தயாரிக்கிறது. பிலிப்ஸ் தயாரிப்புகளின் பட்டியல் காலுக்கு கால் நீண்டு கொண்டே போகிறது. புதிய புதிய மின்சார விளக்குகளை வழங்குவதில் அன்று போலவே இன்றும் முன் நிற்கிறது பிலிப்ஸ். நினைவிருக்கட்டும், உங்களுக்கு எத்தகைய லாம்பு தேவைப்பட்டாலும் பிலிப்ஸிடம் கிடைக்கும்!

**பிலிப்ஸ்**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்






**பிலிப்ஸ் ஆர்ஜண்டா**

இதமான ஒளி தருவதில் இணையற்றது

தேவையான நிபந்தங்கள் அளிப்பதாக வும் கூறினர். அது மட்டுமா? 'ஆச்சாரியாரே, நாட்டில் பலவாறு பேச்சுக்கள் நடந்து கொண்டிருப்பதைக் கேட்டிருப்பீர்கள். ஒருவேளை இளவரசர் சூடாமணி விஹாரத்தில் சில நாள் விருந்தாளியாக இருக்கும்படி நேரும். அவரை வைத்துப் பாதுகாக்க முடியுமா?' என்று குந்தவைப் பிராட்டி கேட்டார். 'தேவி! அத்தகைய பேறு எங்களுக்குக் கிடைத்தால் கண்ணை இமை காப்பது போல் வைத்துப் பாதுகாப்போம்' என்று கூறினேன். என்ன பயன்! இளவரசரா கடலில் மூழ்கினர்? இந்த நாட்டில் உள்ள நல்லவர்களின் மனோரதமெல்லாம் மூழ்கி விட்டது! சோழ சாம்ராஜ்யமே முழுகி விட்டது! சமுத்திர ராஜன் இவ்வளவு பெருங் கொடுமையைச் செய்ய எப்படித் துணிந்தான்? அக்கொடியவனைக் கேட்பார் இல்லையா?'' என்று கதறினர்.

மற்றப் பிக்ஷுக்கள் அனைவரும் மௌனமாகக் கண்ணீர் பெருக்கினர்கள்.

தலைமைப் பிக்ஷு பேசி நிறுத்தியதும் சிறிது நேரம் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் அதுதான் சமயம் என்று புத்த பிக்ஷுக்களிடையே புகுந்து ஆச்சாரியரை அணுக யத்தனித்தான். உடனே அவனைப் பலர் தடுத்தார்கள். ''இவன் யார்? இங்கே எப்படி வந்தான்?'' என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டார்கள்.

''ஐயா! அடியேன் பெயர் சேந்தன் அமுதன். தஞ்சையைச் சேர்ந்தவன். உங்கள் தலைவரிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!'' என்றான்.

''சொல்!, சொல்!'' என்றார்கள் பலர்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்து விட்டு ஆச்சாரியர், ''இவர்களுக்குத் தெரியக் கூடாத ரகசியம் ஒன்றுமில்லை; சொல்!'' என்றார்.

''ஐயா! நோயாளி ஒருவரை அழைத்து வந்திருக்கிறேன்!''

''அது யார் நோயாளி? என்ன நோய்? எங்கே விட்டிருக்கிறாய்?''

''விஹாரத்தின் நடு முற்றத்தில் விட்டிருக்கிறேன்...''

''எப்படி இங்கே வந்தாய்?''

''கால்வாய் வழியாக நோயாளியைப் படகில் கொண்டு வந்தேன். நடுக்கும் குளிர் காய்ச்சல். தாங்கள் உடனே...''

''பகவானே! நடுக்கும் சுரம் தொற்று நோய் ஆயிற்றே? இங்கே ஏன் அந்த நோயாளியை அழைத்து வந்தாய்? அதிலும் நல்ல சமயம் பார்த்து!...''

''ஆச்சாரியா! அசோக சக்கரவர்த்தி புத்த மதத்தினர் என்று இதுகாறும் நினைத்திருந்தேன். இப்போது இல்லை என்று தெரிகிறது....''

''அதுஏன் அப்படிக் கூறுகிறாய்?''

''அசோக ஸ்தம்பம் ஒன்றை நான் காஞ்சிக்கு அருகில் பார்த்தேன். அதில் நோயாளிக்குச் சிகிச்சை செய்வதை முதன்மையான தர்மமாகச் சொல்லியிருக்கிறது. நீங்களோ இப்படி விரட்டியடிக்கிறீர்கள்!'' என்றான் அமுதன்.

ஆச்சாரிய பிக்ஷு மற்றவர்களைப் பார்த்து, ''கொஞ்சம் பொறுங்கள். நான் போய்ப் பார்த்து விட்டு வந்து சொல்லுகிறேன்'' என்று கூறிவிட்டு, ''வா! அப்பனே!'' என்று சேந்தன் அமுதனை அழைத்துக் கொண்டு சென்றார்.

**வி**ஹாரத்தின் நடு முற்றத்தில் கால்வாய்க்கு அருகில் ஒரு யுவனும் யுவதியும் இருப்பதைப் பார்த்துப் பிக்ஷு திடுக்கிட்டார். ''இது என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? இந்த விஹாரத்துக்குள் ஸ்திரீகளே வரக் கூடாதே! பிக்ஷுணிகளுக்குக் கூட வேறு தனி மடம் அல்லவா கட்டி யிருக்கிறது?''

அருகில் போய் அந்த இளைஞன் யார் என்பதை உற்றுப் பார்த்ததும் பிக்ஷு திகைத்துப் போனார் என்று சொன்னால் போதாது! வியப்பினாலும் களிப்பினாலும் அவரால் சிறிது நேரம் பேச முடியவில்லை.

சந்தேக நிவர்த்திக்காக, ''இளவரசர் அருள்மொழி வர்மர் தானா?'' என்று சேந்தன் அமுதனைக் கேட்டார்.

இது இளவரசர் காதில் விழுந்தது. ''இல்லை, ஆச்சாரியரே! இல்லை! நான் இளவரசனுமில்லை, ஒன்றுமில்லை. இந்தப் பெண்ணும் இந்தப் பிள்ளையுமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறார்கள். நான் ஓர் ஓடக்காரன். சற்று முன் இந்தப் பெண்ணைப் பார்த்து 'பெண்ணே! என்னை மணம் புரிந்து கொள்வாயா? இருவரும் படகில் ஏறி தூர தேசங்களுக்குப் போகலாம்' என்றேன். இவள் ஏதேதோ பிதற்றினாள். நான் உலகத்தை ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவனாம்! ஏழை வலைஞர் குலப் பெண்ணாகிய இவள் என்னை மணந்து கொள்ள மாட்டாளாம். நான் சுகமாக இருந்தால் இவளுக்குப் போதுமாம். வருங் காலத்தில் என்னுடைய மகத்தான வெற்றி

களைக் கேட்டு இவள் மகிழப் போகிறாளாம். எப்படி இருக்கிறது கதை? உண்மையில் எனக்குச் சித்தப் பிரமையா இவர்களுக்கா?''

சேந்தன் அமுதன் ஆச்சாரிய பிக்ஷுவின் காதோடு ஏதோ கூறினான். அதற்கு முன்னாலேயே இளவரசர் சுர வேகத்தினால் நினைவிழந்த நிலையில் பேசுகிறார் என்பதைப் பிக்ஷு உணர்ந்திருந்தார். குந்தவை தேவி தம்மிடம் இளவரசருக்கு அடைக்கலம் தரும்படி கேட்டிருந்ததும் அவருக்கு நினைவு வந்தது.

மற்ற பிக்ஷுக்களைப் பார்த்து அவர், ''இந்தப் பிள்ளைக்கு விஷ சுரம்தான் வந்திருக்கிறது. இவனை வெளியில் அனுப்பினால் இன்னும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வந்துவிடும். இலங்கையில் எத்தனையோ ஆயிரம் பேர் இந்தச் சுரத்தினால் இறந்து போனார்கள். ஆகையால் இந்த இளைஞனை என் அறைக்கு அழைத்துப் போய் நானே பணிவிடையும் சிகிச்சையும் செய்யப் போகிறேன். இடையில் சுர வேகத்தினால் இவன் ஏதாவது பிதற்றினால் அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம்!'' என்றார்.

**உ**டனே பிக்ஷு இளவரசர் அருகிலே நெருங்கி ஒரு கையினால் அவரை அணைத்துத் தூக்கினார். சேந்தன் அமுதன் இன்னொரு பக்கத்தில் இளவரசரைப் பிடித்துக் கொண்டு உதவினான். எல்லாரும் படிகளில் ஏறிச் சென்றார்கள்.

இதோ, இன்னும் சில விநாடி நேரத்தில் படிக்கட்டு முழுதும் ஏறிவிடுவார்கள். கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசிப்பார்கள். பிறகு கதவு சாத்தியாகிவிடும். சாத்தினால் சாத்தியதுதான். அப்புறம் அவரைப் பார்க்க முடியாது.

பூங்குழலி எதிர்பார்த்தபடியே நடந்தது. மாடிப் படி ஏறியதும் கதவு திறந்தது. சேந்தன் அமுதனை மட்டும் வெளியில் நிறுத்தித் தலைமைப் பிக்ஷு ஏதோ கூறினார். பிறகு திறந்த கதவு வழியாக எல்லாரும் பிரவேசித்தார்கள்.

கதவு படார் என்று சாத்திக் கொண்டது. அது பூங்குழலியின் இதயமாகிற கதவையே அடைப்பது போலிருந்தது.

இனி இந்தப் பிறவியில் இளவரசரைப் பார்க்கலாம் என்ற நிச்சயமில்லை. அடுத்த ஜன்மத்திலாவது அத்தகைய பாக்கியம் தனக்குக் கிடைக்குமா? — இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே இளவரசர் மறைவதைப் பார்த்துக் கொண்டு நின்றாள் பூங்குழலி.

## அத்தியாயம் பதினொன்று

# கொல்லுப் பட்டறை

**வ**ந்தியத்தேவன் குதிரையைத் தட்டி விட்டான். பழையாறையைக் குறியாக வைத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். பழையாறையிலிருந்து வந்த பாதை ஒருவாறு ஞாபகம் இருந்தபடியால் யாரையும் வழிகூடக் கேளாமல் உத்தேசமாகத் திசை பார்த்துக் கொண்டு சென்றான். முதலில் கொஞ்ச தூரம் காட்டுப் பாதை வழியே சென்றான். குதிரை இதனால் மிகவும் கஷ்டப்பட்டுப் போனதை அறிந்தான். வல்லவரையனுக்கும் களைப்பு அதிகமாகவே இருந்தது. அவன் சிறிது நேரமாவது அயர்ந்து தூங்கிப் பல தினங்கள் ஆகிவிட்டன. அவ்வப்போது கண்ணை மூடிக் கொண்டு ஆடி விழுந்ததைத் தவிர நிம்மதியாக ஓரிடத்தில் படுத்துத் தூங்கினோம் என்பது கிடையாது. பழையாறைக்குப் போய் இளவரசியிடம் செய்தியைச் சொல்லிவிட்டால் அப்புறம் அவனுடைய பொறுப்பு தீர்ந்தது. நிம்மதியாகத் தூங்கலாம். வெகு நேரம் தூங்கலாம்; ஏன், சென்று போன தினங்களுக்கும் சேர்த்து நாள் கணக்கில் தூங்க வேண்டும் என்று திட்டமிட்டான்.

இளவரசி குந்தவையிடம், ''தாங்கள் கூறிய பணியை நிறைவேற்றி விட்டேன்'' என்று சொல்லும் போது தனக்கு ஏற்படக்கூடிய மகிழ்ச்சியை அவன் எண்ணிப் பார்த்தான். தேவியின் முகம் அதைக் கேட்டு எவ்வண்ணம் மலர்ந்து பொலியும் என்பதையும் நினைத்தான். அந்த நினைவு அவனுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது.

இன்னொரு விஷயமும் அவனுக்கு நினைவு வந்தது. காஞ்சியிலிருந்து புறப்பட்டதிலிருந்து எத்தனை பொய்யும் புனைசுருட்டும் அவன் சொல்லியிருக்கிறான்? அவசியம் நேரிட்டதனால்தான் கூறினான். ஆயினும் அதையெல்லாம் நினைக்கும் போது அவனுக்கு உள்ளமும் உடலும் குன்றிப் போயின. இளவரசர் அருள்மொழிவர்மரோடு சிறிது காலம் பழகியதனால் அவனுடைய மனப் போக்கே மாறிப் போயிருந்தது. இராஜரீக காரியங்களில் ஈடுபடுகிறவர்களுக்குச் சாணக்கிய தந்திரங்கள் தெரிந்திருக்கவேண்டும்

இப்போது
புதிய
தோற்றத்தில்!




ஸ்வஸ்திக்
பெர்:ப்யூம்டு
கேஸ்டர் ஆயில்

பரட்டையான படியாத
கேசத்தையும் படியவைக்கும்
நாள் முழுதும் கேசத்தை
எடுப்பாக எழிலோங்கச்
செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச்
செய்கிறது ஸ்வஸ்திக் பெர்:ப்யூம்டு
கேஸ்டர் ஆயில்.

ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM 17/69 TAM

என்று அவன் கருதியிருந்தான். அத்தகைய இராஜரீக தந்திரங்களின் மூலமாக அவனுடைய முன்னோர்கள் இழந்துவிட்ட ராஜ்யத்தைத் திரும்பிப் பெறலாம் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது. அந்த எண்ணமெல்லாம் இப்போது மாறி விட்டது. இளவரசர் அருள்மொழிவர்மரின் நேர்மையையும் சத்திய தீரத்தையும் பார்த்த பிறகு அவனுக்குப் பொய் புனைசுருட்டுகளில் வெறுப்பே உண்டாகி விட்டது. அவரைக் காப்பாற்றுவதாக எண்ணிக் கொண்டு மந்திரவாதியின் காது கேட்க நேற்றிரவு அவன் கூறிய பொய்யையும் எண்ணிக் கொண்டான். அதனால் ஏதாவது விபரீதம் நேராமல் இருக்க வேண்டுமே என்று நினைத்த போது அவன் நெஞ்சு துணுக்கமுற்றது. அதை வேறு யாராவது கேட்டிருந்தால், ஒரு வேளை குந்தவை தேவியிடமே யாரேனும் சொல்லி வைத்தால்? — இளையபிராட்டி நம்பிவிட மாட்டாள்! ஆயினும் எவ்வளவு பெரிய விபத்து?

இனி, இவ்வாறெல்லாம் இல்லாததைப் புனைந்து கூறுவதையே விட்டுவிட வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டும்; அதனால் கஷ்டம் வந்தால் சமாளிக்க வேண்டும். அந்த வீர வைஷ்ணவனைப் போன்றவர்களும் ரவிதாசனைப் போன்றவர்களும் ஒற்றர் வேலை செய்யட்டும். நமக்கு என்னத்திற்கு அந்தத் தொல்லை? வாளின் துணை கொண்டு நமக்குக் கிடைக்கும் வெற்றி கிடைக்கட்டும். அதுவே போதும். அதனால் உயிரை இழந்தாலும் சரிதான். தந்திர மந்திரங்களையெல்லாம் இனி விட்டுவிட வேண்டியதுதான்.

இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டே சென்றதில் குதிரையின் வேகம் தடைப்பட்டதை அவன் சிறிது நேரம் கவனிக்கவில்லை. ஏன், குதிரை மீதிருந்து சிந்தனை செய்து கொண்டே போனதில் கொஞ்சம் கண்ணயர்ந்தும் விட்டான். குதிரை ஓரிடத்தில் தடுமாறிக் குனிந்தபோது அவன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். குதிரை தனது முன்னங்கால் ஒன்றைத் தரையில் ஊன்றி வைக்க முடியாமல் தத்தளித்தது தெரிந்தது. உடனே கீழே இறங்கினான். குதிரையைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஊனமடைந்ததாகத் தோன்றிய முன்னங்காலை எடுத்துப் பார்த்தான். அதன் அடிப்புறத்தில் ஒரு சிறிய கூரிய கல் பொத்துக் கொண்டிருந்தது. அதை லாகவமாக எடுத்து எறிந்தான். நல்ல வேளை; பெரிய காயம் ஒன்றும் படவில்லை. மறுபடியும் குதிரையைத் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்திவிட்டு அதன் முதுகின் மீது ஏறிக் கொண்டான். கப்பலில் அரபு நாட்டார் பேசிக் கொண்டது நினைவு வந்தது.

''தமிழ் நாட்டார் கொடூரமானவர்கள்; அறிவும் இல்லாதவர்கள்! குதிரைகளின் குளம்புக்குக் கவசம் அடிக்காமல் வெறுங்காலினால் ஓடச் செய்கிறார்கள். அப்படி ஓடும் குதிரைகள் எத்தனை நாட்கள் உயிரோடிருக்கும்?''

இதை நினைத்துக் கொண்டே வந்தியத்தேவன் குதிரையை ஓட்டினான். வீரர்கள் போர்க்களத்துக்குப் போகும் போது மார்பிலே கவசம் தரிப்பார்கள். குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவது என்பது அதிசயமான காரியந்தான். ஆயினும் அம்மாதிரி வேறு தேசங்களில் செய்வதுண்டு என்று முன்னமே கேள்விப்பட்டிருந்தான். முதன் முதலாக எதிர்ப்படும் கொல்லுப் பட்டறையில் இதைப் பற்றிக் கேட்க வேண்டியதுதான். முடியுமானால் இந்தக் குதிரையின் குளம்புக்கே கவசம் அடித்துப் பார்க்கலாம். இல்லாவிடில், இது பழையாறை வரை போய்ச் சேர்வதே கடினம். நடுவில் இது விழுந்து விட்டால் வேறு குதிரை சம்பாதிக்க வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது? யாரிடமாவது திருடத்தான் வேண்டும்! சீச்சீ! அந்த நினைவே வந்தியத்தேவனுக்கு வெட்கத்தை உண்டாக்கியது.



''செல்வந்தர்கள் இந்தப் புத்தகத்தை விலை கொடுத்து வாங்கி நூல் நிலையங்களுக்குத் தந்தால் ஸரஸ்வதி தேவிக்குப் பூஜை செய்தவாறு ஆகும். லட்சுமி தேவிக்கு நேரில் பூஜை செய்வதில் பயனில்லை. ஸரஸ்வதியைத் திருப்தி செய்தால் லட்சுமி தேவியின் மனமும் உருகும்.''

'பொன்னியின்செல்வன்' முன்னுரையில் ராஜாஜி. தகவல்: வி. ச. வாசுதேவன்

## ராஜாஜி ரசித்த விருந்துகள்



"பாரதியார் பட்டினி கிடந்தார் என்று பலர் சொல்கிறார்கள். ஆனால் என்னுடைய அதிர்ஷ்டம் அந்தப் பாரதியாரே எனக்குச் சோறு போட்டார். சாப்பாடு ரொம்பவும் நன்றாகத்தான் இருந்தது. பாரதியாரின் வறுமையைப் பற்றி நாம் இப்போது ஓயாமல் வருத்தப்பட வேண்டியதில்லை. அவருக்கு ஏராளமாக யாராவது பணம் கொடுத்திருந்தாலும், ஒரு நாளில் செலவழித்து விட்டிருப்பார். அவரால் பணத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டு சௌக்கியமாக இருந்திருக்க முடியாது. அவருடைய சுபாவம் அது. அதனால்தான் அற்புதமான கவிகளைப் பாட முடிந்தது !" – 'பாரதியார் பெருமை' என்ற நூலில் ராஜாஜி.

"எதை மறந்தாலும் 1907ஆம் ஆண்டில் பூனா சென்றிருந்த போது சீனிவாச சாஸ்திரியார் எனக்குக் கொடுத்த விருந்தை மறக்க முடியாது. அதைப் பற்றிப் பேசும் போதே அன்று சாப்பிட்ட உணவின் மணத்தை இப்போதும் நுகர முடிகிறது."

- 22-9-69 அன்று நிகழ்ந்த ஸ்ரீமான் சீனிவாச சாஸ்திரியார் நூற்றாண்டு விழாவில் ராஜாஜி ஆற்றிய உரையிலிருந்து.

- தகவல்: வி. ச. வாசுதேவன்

காட்டுப் பாதையிலிருந்து உத்தேசமாகக் குதிரையைத் திசை மாற்றி விட்டுக் கொண்டு போய் வந்தியத்தேவன் இராஜ பாட்டையை அடைந்தான். வந்தது வரட்டும்; இனிமேல் இராஜ பாட்டை வழியாகத்தான் போக வேண்டும். தன்னைத் தெரிந்தவர்கள் யாரும் இந்தப் பக்கத்தில் இருக்க முடியாது. பழுவேட்டரையர் பரிவாரங்கள் பின்னாலேதான் வரும். மந்திரவாதியும் அப்படித்தான். ஆகையால் அபாயம் ஒன்றுமில்லை. மேலும், இராஜ பாட்டையோடு போனால் கொல்லுப் பட்டறை எங்கேயாவது இருக்கும். அதில் குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போட முடியுமா என்று பார்க்கலாம்.

வந்தியத் தேவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சிறிது தூரம் சென்றதும் ஒரு கிராமம் தென்பட்டது. கிராமத்தில் ஏதோ ஒரு விதக் கிளர்ச்சி ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. ஒரு பக்கத்தில் வீதிகளிலும் வீடுகளிலும் தோரணங்கள் கட்டி அலங்கரித்திருந்தார்கள். ஒரு வேளை பெரிய பழுவேட்டரையர் இந்தப் பக்கமாய் வரப்போகிறார் என்று அறிந்து இப்படி ஊர் அலங்காரம் செய்திருக்கலாம். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் வருவதற்குள் தான் வெகு தூரம் போய்விடலாம் என்பது நிச்சயம்.

மற்றொரு பக்கத்தில் கிராமத்து ஜனங்கள், — ஸ்திரீகள் புருஷர்கள் வயோதிகர்கள் சிறுவர் சிறுமியர் அனைவரும், — அங்கங்கே கும்பல் கும்பலாக நின்று கவலையுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். விஷயம் என்னவாயிருக்குமென்று அவனால் ஊகிக்க முடியவில்லை. அவர்களில் சிலர் குதிரையில் வருகிறவனைக் கண்டதும் அவனை நிறுத்தும் எண்ணத்தோடு அருகில் வந்தார்கள். வந்தியத்தேவன் அதற்கு இடங்கொடாமல் குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு மேலே போனான். வீண் வம்புகளில் அகப்பட்டுக் கொள்ள அவன் இஷ்டப்படவில்லை.

கிராமத்தைத் தாண்டியதும் சாலை ஓரத்தில் கொல்லுப் பட்டறை ஒன்று இருக்கக் கண்டான். அதைக் கடந்து மேலே செல்ல அவனுக்கு மனம் வரவில்லை. குதிரையை நிறுத்தி விட்டுப் பட்டறைக்குள் சென்றான்.

பட்டறைக்குள் கொல்லன் ஒருவன் வேலை செய்து கொண்டிருக்கக் கண்டான். ஒரு சிறுவன் துருத்தி ஊதிக் கொண்டிருந்தான். வந்தியத்தேவன் உள்ளே பிரவேசித்த அதே சமயத்தில் இன்னொரு மனிதன் பின்பக்கமாக மறைந்ததாகவும் அவனுக்குத் தோன்றியது. ஆனால் இதிலெல்லாம் அவன் கவனம் செல்லவில்லை. கொல்லன் கையில் வைத்துக் கொண்டிருந்த வாள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. அது ஓர் அபூர்வமான வாள்; பட்டறையில் வைத்துக் கொல்லன் அதைச் செப்பனிட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அதன் ஒரு பகுதி பளபளவென்று வெள்ளியைப் போல் பிரகாசித்தது. இன்னொரு பகுதி நெருப்பிலிருந்து அப்போதுதான் எடுக்கப்பட்டிருந்தபடியால் தங்க நிறச் செந்தழல் பிழம்பைப் போல் ஜொலித்தது.

"வாள் என்றால், இதுவல்லவா வாள்?" என்று வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் வியந்தான். (தொடரும்)

# உங்கள் கணவர் உறங்க கண்கவர் வனப்புடைய, மிகச் சிறந்த விரிப்புக்களை அளியுங்கள்!

சாதாரண வெள்ளை விரிப்புக்களை உபயோகிப்பது பழமையானது! வண்ண மலர்கள், ரோஜாக்கள், எழில்மிகு சித்திரங்கள், வண்ணக் கோடுகள் போட்ட கவினமான பாம்பே டையிங் விரிப்புக்களையே இப்பொழுது வாங்குங்கள். உங்கள் படுக்கையறையை அலங்கரிக்கும் பிரிண்டுகளும் நிறங்களும் உள்ள இந்த விரிப்புகளின் விலை அதிகமோ என்று அஞ்ச வேண்டாம். ஏனெனில் இவற்றின் விலை தரத்தைப் பொறுத்தது மட்டுமே, நிறத்தையல்ல. மென்மை சுகம் நிறைந்தவை, தொட்டால் வளைந்து தரும்!



**பாம்பே டையிங்**



# ராமாயணம்
### ராஜாஜி

## 38. அதோ ராமனுடைய ஆசிரமம்!

மறுநாள் காலை முனிவர், ''இவ்விடத்திலிருந்து இரண்டரை யோசனை தூரத்தில் மந்தாகினி நதி ஓடுகிறது. அதன் கரையில் ஜனசஞ்சாரமற்ற பெரிய காடு இருக்கிறது. தெற்கே சித்திரகூட மலை இருக்கிறது. மலைக்குக் கீழ், வனத்தில் ஒரு பர்ணசாலையில் ராமலக்ஷ்மணர்களும் சீதையும் வசித்து வருகிறார்கள்'' என்று சொல்லி அங்கே போகும் வழியையும் விளக்கிச் சொன்னார்.

பிறகு பரத்வாஜரைத் தாய்மார்கள் மூவரும் வலம் செய்து வணங்கினார்கள். ''இவர்களை எனக்கு அறிமுகப்படுத்துவாய்'' என்று கேட்டார் ரிஷி.

பரதன் அவ்வாறே கோசலை, சுமத்திரை, கைகேயி இவர்களை ஒருவர் பின் ஒருவராகப் பெயர்கள் சொல்லி ரிஷியிடம் ஆசி பெறச் செய்தான்.

''இதோ துக்கப்பட்டு, பட்டினி கிடந்து, இளைத்து நிற்கிறாள் மகாராஜாவின் பட்டமகிஷி கௌசல்யா தேவி. இந்திரனைப் பெற்ற அதிதிக்குச் சமானமான இவளே, சக்கரவர்த்தித் திருமகனைப் பெற்றவள். வலதுபுறத்தில் கோசலையைத் தாங்கிக் கொண்டு, வாடிய புஷ்பங்கள் நிறைந்த கொடியைப் போல் துக்கப்பட்டு நிற்பவள் அரசனுடைய இரண்டாவது பட்டமகிஷி. லக்ஷ்மண சத்ருக்னர்களைப் பெற்ற பாக்கியவதி. இதோ நிற்கிறாள் எங்களுடைய துக்கத்துக் கெல்லாம் காரணமான என் தாய். ஆர்ய வடிவம் கொண்ட அனார்யை'' என்று கைகேயியைச் சுட்டிக் காட்டினான். அவளும் மற்றவர்களைப் போலவே ரிஷியை வலம் செய்து நமஸ்கரித்து விட்டு வெட்கம் படர்ந்த முகத்துடன் மகன் பரதன் பக்கத்தில் வந்து நின்றாள்.

அப்போது பரத்வாஜ ரிஷி பரதனுக்குச் சொன்னார்:

''தாயை அப்படிச் சொல்லாதே. உலகத்தின் நன்மைக்காகவே அனைத்தும் நடந்தன'' என்றார்.

தாய்மார்களைக் காட்டும் இந்த நிகழ்ச்சியைக் கம்பர் இடம் மாற்றி வெகு அழகாகக் குகப் படலத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டார். குகன் பணிவுடன் விசாரிக்க, பரதன் ஒவ்வொருவராகச் சொல்லி அறிமுகப்படுத்துகிறான். பரத்வாஜ ரிஷி ஆசிரமத்தில் நடந்ததாக வால்மீகி சொல்லும் நிகழ்ச்சியை கவிக் கண்ணால் பார்த்து அதன் சரியான இடம் எங்கே என்று கண்டு கொண்டு அமைத்துத் தம் அசாதாரணத் திறமையோடு கம்பர் பாடியிருக்கிறார்.

அதை இந்த இடத்திலேயே எடுத்துச் சொல்வது குற்றமாகாது.

**'சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற**
**கோசலையைத் தொழுது நோக்கி,**
**வெற்றித்தார்க் குரிசில், இவர் யாரென்று**
**குகன் வினவ 'வேந்தர் வைகும்**

முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகும்
ஈன்றானை முன்ஈன் றானைப்
பெற்றத்தால் பெரும்செல்வம் யான்பிறத்த
லால்துறந்த பெரியாள்' என்றான்.

''ராமன் என்கிற செல்வத்தைப் பெற்ற கோசலை, பரதன் என்று ஒரு மகன் நான் பிறந்ததால் அந்தச் செல்வத்தை இழந்தாள். அவளே இவள்'' என்று கூறினான் பரதன்.

அறந்தானே என்கின்ற அயல்நின்றான்
, கை (ோக்க, 'ஐய அன்பின்

நிறைந்தானை உரை'யென்ன 'நெறிதிறம்பாத்
தன்மெய்யை நிற்பதாக்கி
இறந்தான்தன் இளந்தேவி யாவர்க்கும்
தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன்என்னப் பிரியாதான்
தனைப்பயந்த பெரியாள்' என்றான்.

'' நான் அடையாத பாக்கியத்தை லக்ஷ்மணன் பெற்



றான். அந்த உண்மைத் தம்பியின் தாய் இவள்.''

'படர்எலாம் படைத்தானைப் பழிவளர்க்கும்
  செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
  உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடரேலாம் உயிரிலா எனத் தோன்றும்
  உலகத்தே ஒருத்தி அன்றே
இடரிலா முகத்தாளை அறிந்திலையேல்
  இந்நின்றாள் என்னை ஈன்றாள்.'

வால்மீகி ராமாயணத்தில் இருப்பது போலவே கம்பருடைய சித்திரத்திலும் பரதன் கைகேயியைக் கடுமையான மொழிகளைச் சொல்லித்தான் அறிமுகப் படுத்துகிறான்.

* * *

பரதனும் பெரும் பரிவாரமும் பரத்வாஜர் சொன்ன வழியைப் பிடித்துச் சென்றார்கள். சித்திரகூட மலையும் தெரிந்தது. ஓர் இடத்தில் இலேசாகப் புகை கிளம்புவதையும் கண்டார்கள். அதுவே சக்கரவர்த்தித் திருமகன் ஆசிரமம் என்று ஊகித்துக் கொண்டார்கள். உடனே பரிவாரத்தில் பெரிய மகிழ்ச்சிக் கோஷம் கிளம்பிற்று. அனைவரையும் அங்கேயே நிறுத்தி விட்டுச் சுமந்திரன் வசிஷ்டர், பரதன் மூவர் மட்டுமே புகை தெரிந்த இடம் நோக்கிச் சென்றார்கள். (தொடரும்)

---

# இராஜாஜி வாழ்க! வாழ்க!

வித்துவான் நெல்லை ஆ. கணபதி

அங்கிங் கெனாதபடி எங்கும் புகழுடன்
அரசியல் உலகமொடு
ஆன்மீக உலகமும் இலக்கிய உலகமும்
அனைத்திலும் உயர்ந்துநின்று
எங்கும் சிறப்புடன் தன்மனம் கூறிடும்
எதையுமே எடுத்துரைத்து
ஏற்றாலும் மற்றவர் ஏற்காமல் விட்டாலும்
இதுஉண்மை! என்றுகூறி
கங்குல் பகலென இடைவிடா உழைப்பினால்
காலத்தை வென்ற வேந்தர்!
கற்றவர்; உலகெலாம் போற்றவே வாழ்பவர்!
காந்திக்கும் உறவானவர்!
இங்குநாம் வாழ்கையில் வாழ்கிறார் என்பதை
எண்ணிநாம் பெருமையோடு
ஈடுஇணை யற்றஅம் மேதையைப் போற்றுவோம்!
இராஜாஜி வாழ்க! வாழ்க!



ஒளிவீசுவோரின் மதிப்பு—
ஸன்லைட் தரும் சிறப்பு

ஸன்லைட் சலவையின்
ஒளியே ஒளி. மற்ற சோப்புக்களைவிட
தூய்மையிற் சிறந்தது ஸன்லைட்




லின்டாஸ்-64-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# சிலையைத் தேடி..

கதை: வாண்டுமாமா



10

சித்திரம்: ரமணி..
















திடீரென்று சுரங்கப் பாதை முடிவடைந்து படிகள் மேல் நோக்கிச் செல்கின்றன.
என்ன அக்கா, இந்தப் படிகள் எங்கே...?
எங்கே போனாலும் சரி ரவி! நாம் ஏறிப் போகத் தான் வேண்டும். இனித் திரும்பிச் செல்ல முடியாது.


மேல் நோக்கிச் சென்ற பாதையின் முடிவிலே தட்டுப் பட்ட கதவைத் தட்டித் தள்ளிய போது மனிதர்கள் நிறைந்த தோர் விசாலமான அறைக்குள் இருவரும் வந்தார்கள்..
என்னது...?
சுங்சிங்! எங்களை அந்தக் கம்யூனிஸ்டுகள் கைதியாக்கி இழுத்துப் போன போது இவ் விரு இந்தியக் குழந்தைகளும் இந்த நம் விட்டினருகில் நின்று கொண்டிருந் தார்கள்.
இவர்களுக்கு இந்த வழி எப் படித் தெரிந்தது?


விடுதலை இயக்கத்தைச் சேர்ந்தவர்களா நீங்கள்? கம்யூனிஸ்டுகள் எங்களை அந்தச் சுரங்க வழியூடாகத் தொடர்ந்து வந்து கொண் டிருக்கிறார்கள்.
'சுங்சிங்'...! இந் திரபால் மாமா குறிப் பிட்ட பெயர் இதுதானா? ஒருவேளை அந்தச் 'சுங்சிங் இவர் தானா?


தலைவராகத் தோன்றிய அவன் சட்டென்று ஒரு விசையைப் பற்றி அழுத்தினான்.
தோழர்களே! நம் அபாய காலத் திட்டப்படி, சுரங்க வழியைத் தகர்த்து விட்டு நாம் இங்கிருந்து தப்பி விட வேண்டும் தயாராகுங்கள்.
(ரகசியமாக) அக்கா! அவர்கள் இவரை 'சுங்சிங்' என்று அழைத்ததைக் கவனித்தாயா? இந்திர பால் மாமா கூறிய சங்கேதக் குறியை இவ ரிடம் கூறு பார்க்கலாம்.


சுரங்கத்தினுள்ளே....
இந்த வேகத்தில் போனால் எந்தக் காலத் தில் இந்தனை இடி பாடுகளையும் அகற்றி நாம் முன்னேறுவது? சீக்கிரம் விரைவாகச் செயல் படுங்கள். அந்த இரண்டு இந்தியக் கொட்டான் களையும் தப்ப விடக் கூடாது.....

தொடரும்...

# பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்

விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று! சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு! டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.







® டினோபால் என்ற பெயர் ஜே.ஆர். கெய்கீ எஸ்.ஏ. பாஸல் ஸ்விட்சர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், த.பெ. 11050, பம்பாய்-20 BR.

Shilpi SGT-1A/66 Tam.









# அறிஞர்க்கிடையில் பேரறிஞர்

(1) பட்டேல் நேருஜியுடன்.

(2) லால் பகாதூர் சாஸ்திரியுடன்.

(3) சத்தியமூர்த்தி, மாங்குடி சிதம்பர பாகவதர், கே. வி. கிருஷ்ணசாமி அய்யர் ஆகியோருடன்.

(4) ஸ்ரீ பிரகாசா, திரு.வி.க.வுடன்.

(5) பாகிஸ்தானின் சிருஷ்டிகர்த்தா ஜனாப் ஜின்னாவுடன்.

(6) கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி, தேவதாஸ் காந்தி ஆகியோருடன்.











(1) தேசத் தலைவர்களுடன் தில்லி ராஷ்டிரபதி பவனத்தில் ராஜாஜி. (2) காலஞ்சென்ற ராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர்ஹுஸைனுடன். (3) காலஞ்சென்ற முதலமைச்சர் அண்ணாதுரையுடன். (4) இன்றைய முதலமைச்சர் திரு கருணாநிதியுடன்.







(1) இன்று அமெரிக்க ஜனாதிபதியாக இருக்கும் நிக்ஸன் 1953ல் சென்னைக்கு வந்திருந்தபோது ராஜாஜியுடன் கலந்து பேசினார். (2) தில்லியில் பிரிட்டிஷ் ஹைகமிஷனராக இருக்கும் ஸர் மாரிஸ் ஜேம்ஸ் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தபோது ராஜாஜியைக் கண்டு அளவளாவினார். (3) ஜயப்பிரகாஷ் நாராயணுடன். (4) சேங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராமதீட்சிதர் பிரவசனத்தில்.











(1) மகாராணி காயத்ரீ தேவி ராஜாஜியின் பேச்சைக் கூர்ந்து கேட்கிறார்.

(2) ஒரிஸ்ஸா முதன் மந்திரி ஆர். என். சிங் தேவுடன்.

(3) ஆசாரிய ரங்காவும் மஸானியும்.

(4) ம. பொ .சி.யுடன்.

(5) கல்கி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம், காலஞ்சென்ற நவரத்ன ராம ராவ் ஆகியோருடன் ராஜாஜியைக் காண்கிறார்கள்.



## அத்தியாயம் 11

# அவதியுறும் காதல்



# சாருலதா

## கி.ராஜேந்திரன்

மனேஜர் பிரதர்ஸில் காரியாலய நேரம் முடிந்ததும் குணசீலனும் கமலாவும் தனித் தனியாகக் கிளம்பினார்கள். பாரி முனை பஸ் நிலையத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். ஆனால் பேசவில்லை. வெவ்வேறு பஸ்களில் ஏறினார்கள். ஸாந்தோம் பீச்சில் இறங்கிய கமலா மணல் பரப்பில் நடந்து, அலைகளுக்குப் பக்கத்தில் வழக்கமான இடத்தில் ஒரு படகின் மறைவில் அமர்ந்து குணசீலன் வரக் காத்திருந்தாள். அலைகளுக்குப் பக்கத்தில் அவள் மனமும் அலை பாய்ந்து கொண்டிருந்தது.

குணசீலன் வந்த பிறகும் அவள் குதூகலமடையவில்லை. சற்று நேரத்துக்குப்பின் அவன் மௌனத்தைக் கலைத்தான். ''ஹெட் கிளார்க் நாணு, பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணி விட்டாராம்.''

''உம்....''

'' ஒரு மாதம் லீவு வேணும் என்று கேட்டு மானேஜருக்கு எழுதியிருக்கிறார்.''

'' உம்....''

'' கோவிந்தனுக்கு லாட்டரிச் சீட்டில் பரிசு விழுந்திருக்கிறது.''

'' உம்...''

'' லட்ச ரூபாய் எதிர்பார்த்தான்; நூறு ரூபாய் கிடைத்திருக்கிறது.''

''எதற்கு இப்படி நம் இரண்டு பேருக்குமே அக்கறை இல்லாத விஷயங்களைப் பற்றிப் பேசிப் பொழுதைக் கழிக்கிறீர்கள்?''

'' நமக்கு அக்கறை உள்ள விஷயத்தைப் பற்றிப் பேச நாம் பயப்படுவதால்தான்.''

'' என்ன பயம்?''

'' நாம் அந்தரங்கத்தில் எதற்காக ஆசைப்படுகிறோமோ அது நடக்காமல் போய் விடுமோ என்ற பயம்தான்.''

''நடக்காமல் போவானேன்? நீங்கள் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொண்டு உங்கள் அக்காவுக்கு வரன் பார்த்தால் ஆயிற்று. அப்புறம் நம் கல்யாணம் நடந்து விட்டுப் போகிறது.''

'' அது அவ்வளவு சுலபமில்லை, கமலா.''

'' கஷ்டம்தான். அவள் சாமர்த்தியம், அழகு, அந்தஸ்துக்கு ஏற்ப பணக்கார இடத்துக் கெட்டிக்காரப் பிள்ளையாகப் பார்க்க வேண்டும். அவளுக்கென்று ஒருத்தன் பிறக்காமலா இருப்பான்? நீங்கள் கொஞ்சம் சிரமப்பட வேண்டும்.''

'' உனக்குப் புரியவில்லை, கமலா. நான் செய்யக்கூடிய காரியமில்லை. அவளாக ஏதாவது ஏற்பாடு செய்து கொண்டால்தான் உண்டு.''

'' அக்காவின் கல்யாணத்தில் தனக்குப் பொறுப்பில்லை என்று ஒதுங்குகிற ஆசாமி உலகத்திலேயே நீங்கள் ஒருத்தர்தான்!''

'' நான் அப்படி அலட்சியமாக இல்லை; சாருவுக்குக் கல்யாணம் நடக்கக் கூடுமானல் என்னைவிடச் சந்தோஷப்படுகிறவன் வேறு யாரும் இருக்க முடியாது.''

'' பிறகு பொறுப்பைத் தட்டிக் கழிப்பானேன்?''

'' அவளுக்காக நான் வரன் தேடுவது அசாத்தியம். ராமனுக்குத் திருமணம் முடித்து வைக்க விசுவாமித்திரர் வந்தார். ராமன் கடலில் அணை கட்டிய போது ஒரு அணில் உதவ முன்வந்து நல்ல பெயர் தட்டிக் கொண்டு போயிற்று. ஆனால் அதே அணில் ராமனை மிதிலாபுரிக்கு அழைத்துப் போயிருக்க முடியுமா? அது அதிகப் பிரசங்கித்தனமாகத்தான் இருக்கும்!''

''எனக்கு உங்கள் போக்குப் புரியவுமில்லை; பிடிக்கவுமில்லை. நீங்கள் மாப்பிள்ளை தேட மாட்டீர்கள்; அவளாகவும் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. 'அவள் அப்படி இருக்கும் போது என் கல்யாணத்துக்கு என்ன அவசரம் ?' என்றும் கேட்கிறீர்கள். இந்தச் சிக்கலை விடுவிப்பது எப்படி ?''

''நம்மால் முடியாது; ஆண்டவனாக வழி வகுத்தால்தான் உண்டு.''

'' யார் கண்ணிலும் படாமல் இப்படி வெவ்வேறு பஸ்களில் பதுங்கிப் பதுங்கி வந்து இங்கு ரகசியமாய்ச் சந்திப்பது எனக்குப் பிடிக்கவில்லை.''

'' அப்படியானால் சந்திக்க வேண்டாம்.''

துயரம் நிரம்பியிருந்த கமலாவின் உள்ளம் கொதித்தது. கொப்புளங்கள் வெடித்து விசும்பலாக வெளிவந்தன.

'' கமலா, பிளீஸ் ! அழாதே, கமலா !'' என்ற போது குணசீலனுக்கு நா தழுதழுத்தது. தானும் அழுது விடக் கூடாதே என்று கவலைப்பட்டான் அவன்.

'' நாம் சந்திக்க வேண்டாம் என்று சொல்ல உங்களுக்கு எப்படி மனம் வந்தது ?''

''ஒளியாமல் பகிரங்கமாகச் சந்திக்க நமக்குத் தைரியமில்லையே, கமலா ! ஏற்கனவே ஒரு முறை மானேஜர் நம்மைக் கூப்பிட்டு எச்சரித்த பிறகு தானே இந்த மாதிரி ஏற்பாடு செய்து கொண்டோம்? நம் காதல், திருமணத்தில் முடியும் என்ற நம்பிக்கை நமக்கிருந்தால் காரியாலயத்தில் மட்டுமென்ன, ஊரில், உலகத்தில் யாரையும் லட்சியம் பண்ணாமல் கைகோத்துச் செல்லலாம். ஆனால் அந்தப் பாக்கியம் நமக்கு இல்லையே ?''

'' அப்படியானால் என்னை ஏன் காதலித்தீர்கள் ? நான் உங்களைக் காதலிக்க வேண்டும் என்று ஏன் எதிர்பார்த்தீர்கள் ? என் காதல் நெஞ்சத்தைக் காலடியில் போட்டு மிதிக்கவா?'' கோபத்துடன்கேட்டு அவள் விம்மினாள்.



''தப்புத்தான் கமலா; என் வாழ்நாளில் நான் செய்துள்ள மிகப் பெரிய தவறு அதுதான். எதிர்காலம் என்று ஒன்று நம் காதலுக்கு இல்லை என்று தெரிந்தும் உன்னைக் காதலித்தேன் பார்! என்னை மன்னித்துவிடு!''

சட்டென்று அவள் விரல்கள் அவன் வாயைப் பொத்தின. ''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! ராமர் படத்தை வைத்துத் தினம் நான் ஒரு நிமிஷம்தான் தியானித்து ஒரு பூதான் போடுகிறேன். ஆனால் அந்த ஒரு நிமிஷமும் ஒரு பூவும் பக்தியில் தோய்ந்தவை என்பது உண்மையாக இருக்கும் போது நம் கல்யாணம் எப்படி நடக்காமல் போகும்?'' அன்புத் தேனை உண்டுக் கிறங்கிய வண்டுகளைப் போல் அவள் கண்கள் ஒரு மோக மயக்கத்தோடு அவனைப் பார்த்தன.

குணசீலனின் அதரங்களில் அவள் விரல்களின் ஸ்பரிசம் ஏற்படுத்திய இனிய கிளுகிளுப்பு இன்னும் மறையவில்லை.

பொறாமையுற்றவை போல் கடல் அலைகள் பொங்கி எழுந்து அவர்களைச் சூழ்ந்தன. நாலாபுறமும் எழும்பி விழுந்தன; நெருங்கி வந்தன. 'ஓம், ஓம்' என்றொரு சத்தம் காதுகளை நிறைத்து, நெஞ்சில் பாய்ந்து, சிந்தனையை அழித்தது. அலைகள் சரிந்தன; நீர்த்துளிகள் பன்னீராக அவர்கள் மீது சிந்தின. அருகே, அருகே, இன்னும் அருகே அலைகள் வந்து அவர்களை நெருக்கின. ஒருவரிடம் ஒருவர் ஒண்டிக் கொள்ளச் செய்தன. மூச்சு முட்டியது.

திடும்மென்று ஓர் இடியோசை. தூக்கி வாரிப் போட அவர்கள் இணை பிரிந்தார்கள். அண்ணாந்து பார்த்தார்கள். கருமேகக் குவியல்கள்.

''போவோமா?'' என்றான் அவன்.



"இன்னும் சற்று நேரம்."

"மழை பெய்யும்போலிருக்கிறதே?"

"பெய்தால் பெய்யட்டும்."

அவள் ஒரு போதை நிலையிலிருந்து விடுபட்டு யதார்த்த உலகுக்குத் திரும்பியிருந்தாள். "ஆனாலும் உங்கள் அக்கா இப்படி இருக்க வேண்டாம். நம்மைப் பற்றித் தெரியாதவளா? கொஞ்சம் விட்டுக் கொடுக்கக்கூடாதா? கல்யாணம் செய்து கொள்வதில்லை என்று அப்படி என்ன ஒரு பிடிவாதம், கல்நெஞ்சம்?"

"இல்லை கமலா, சாரு அனுதாபத்துக்குரியவள். அவளைப் பற்றி உனக்குச் சரியாகத் தெரியாது."

"என்ன தெரியாது?"

"என்ன தெரியாது என்பதை அவள்தான் சொல்ல வேண்டும்."

"எதற்கு என்னிடம் மறைக்கிறீர்கள்? சாதாரணமாகக் காதலர்களுக்கிடையில் ஒளிவு மறைவு இருக்கக் கூடாது என்றுதான் படித்திருக்கிறேன்; கேள்விப்பட்டிருக்கிறேன்."

"ஆனால் நாம் சாதாரணக் காதலர்கள் இல்லையே?"

"நீங்கள் மனம் விட்டுப் பேசாவிட்டாலும் அதனால் நம் அன்புக்குப் பங்கம் வந்துவிடப் போவதில்லை."

குணசீலன் சிரித்தான். "எதற்குச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் கமலா.

"என்னவானாலும் நம் அன்பு மாறாது என்ற இதே வாயால்தான் சற்று முன்னால் எதற்காக என்னைக் காதலித்தீர்கள் என்று கோபமாகக் கேட்டாய்."

"ஏதோ கேட்டேன். நாம் வசதியான வீடாகத் தேடிப் பார்த்துக் குடி போவதைப் போலவா காதல் நடந்து கொள்கிறது? சில சமயம் அது அரண்மனையில் ஏகபோகமாக, சௌக்கியமாக வாசம் செய்கிறது; சில சமயம் பாவம், ஒண்டுக் குடித்தனம் நடத்தி வீட்டை இன்னொருத்தருடன் பகிர்ந்து கொள்ளவும் செய்கிறது; இன்னும் சில சமயம் ஒட்டைக் கூரைக்குக் கீழே விதியே என்று வசிக்கிறது; வேறு சில தருணங்களில் நடுத்தெருவில் நாதியற்றுக் கிடக்கிறது."

"இதில் நம் காதல் எந்த ரகமோ?"

"நம் காதல் சிறைக் கூடத்தில் அடைபட்டுக் கிடக்கிறது. பூட்டி, சாவியை உங்கள் அக்கா இடுப்பில் செருகிக் கொண்டு போய் விட்டாள்! கிளம்புங்கள், தூற்றல் போடுகிறது!"

பஸ் ஸ்டாண்டை நோக்கி நடக்கும் போது, "நான் வேலைக்குப் போவதே அப்பாவுக்குப் பிடிக்கவில்லை. என்னென்னவோ சொல்லி சமாளித்துக் கொண்டு வருகிறேன்" என்றாள் கமலா.



காலஞ் சென்ற தமிழக முதல்வர் திரு ஸி. என். அண்ணாதுரை அவர்கள் நியூயார்க்கில் சிகிச்சை பெற்று வந்த சமயம் 11-10-68ந் தேதியிட்டு, தம் கைப்பட தலைவர் ராஜாஜிக்கு ஆங்கிலத்தில் கடிதம் எழுதினார். அதில் ராஜாஜியின் பணிகள் வீண்போகாது என்பதை இவ்விதம் உருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்:

"காந்தி ஜயந்தி பற்றிய தங்கள் கட்டுரையைக் 'கல்கி'யில் படித்தேன். அதில் பொதிந்திருந்த தங்களது ஆழ்ந்த தாபத்தை உணர்ந்தேன். சில ஆண்டுகளுக்குமுன் சென்னை மாநகராட்சியின் வரவேற்பில் தாங்கள் நிகழ்த்திய உரை என் நினைவுக்கு வந்தது. ஆயினும், தாங்கள் பொறுமையுடன் விதைத்துக் கொண்டிருக்கும் சிந்தனைகள் களர் நிலத்தில் விழுந்துவிடவில்லை என்று திண்ணமாக நம்புகிறேன். எதிர்காலத்தில் பசும் பயிர்கள் எழும்புமென நம்புகிறேன்.

அன்பு வணக்கங்கள்
ஸி. என். அண்ணாதுரை"

அண்ணாவின் வார்த்தையைப் பாழடிக்காமல் நிறைவேற்றி வைக்கும் பொறுப்பு நம் கையில்தான் உள்ளது என்பதைக் கூறவும் வேண்டுமோ?

-- வி. ச. வாசுதேவன்

"வாஸ்தவம்தானே, கமலா! பெரிய அளவில் பணத் தட்டுப்பாடு என்று ஏதும் இல்லாத போது பெண்ணாய்ப் பிறந்த நீ எதற்கு ஆபீசுக்குப் போக வேண்டும்? வீட்டோடு இருந்து விடேன்!"

"அப்பாவின் நோக்கம் உங்களுக்குப் புரியவில்லை. முதலில் வேலைக்குப் போக வேண்டாம் என்பார். அப்புறம் கொஞ்ச நாள் கழித்து உங்களிடம் ஜாடைமாடையாக நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து போவதை நிறுத்திக் கொள்ளச் சொல்வார்!"

"ஐயோ, ஏன் அப்படி?"

"இதுகூடப் புரியவில்லையா?"

"புரிகிறது கமலா! நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய நான் லாயக்கற்று இருக்கும் போது அடிக்கடி வீட்டுக்கு வந்து உன்னைப் பார்த்து விட்டுப்

போவது பிசகுதான். நமக்குக் கல்யாணம் நடக்காது என்று தெரிந்ததும் உனக்கு வேறு இடங்களில் வரன் தேடுவார். நான் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பது அதற்குத் தடையாக இருக்கும்.''

'' இப்படி வாய் கூசாமல் பேச உங்களுக்கு எப்படி மனம் வருகிறது? உங்கள் அக்காவைப் போல் நீங்களும் ஒருவிதத்தில் கல்நெஞ்சக்காரர்தான்!''

''மனமா பேசுகிறது? அறிவு அலசிப் பார்க்கிறது !''

''என் உள்ளம் பதைக்கிறதே, அது தெரியவில்லையா, உங்களுக்கு?''

அவர்கள் ஏற வேண்டிய பஸ் தென்பட்டுப் பேச்சுக்குத் தடை விதித்தது. காதலுக்குக் கமா போட்டு, பஸ்ஸைப் பிடிப்பதில் கவனம் செலுத்தினார்கள். பெண் என்று மரியாதை காட்டி கமலாவை ஏற்றிக் கொண்ட கண்டக்டர் குணசிலனை நிர்த்தாட்சண்யமாக ஒதுக்கி விட்டான்.

' வீட்டுக்கு வாருங்கள் ' என்று ஜாடை காட்டினாள் கமலா. விசில் சத்தம் கேட்டது.

அரை மணி நேரத்துக்குப் பிறகு இன்னொரு பஸ் பிடித்து அவன் ராமலிங்கத்தின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

முதலில் அப்பாவைப் பேச விட்டுப் பிறகு, அடக்கத்துடன் உரையாடலில் கலந்து கொள்வதுதான் கமலாவுக்கு வழக்கம். ஆனால் இன்று அவன் வரவை எதிர்பார்த்து வாசலிலேயே காத்திருந்தாள் அவள். அவசரம் அவசரமாகக் குளித்து அலங்காரம் செய்து கொண்டிருந்தாள் என்பது பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்தது.

இரட்டைப் பேட்டில் முக்கால் முழ அகலத்துக்குப் பார்டருடன் கூடிய பட்டுப் புடவை. அது புதுப் புடவை என்பதும் சரசரப்பிலிருந்து புரிந்தது. அதன் பள பளப்புடன் அவள் விழிகளின் ஒளி போட்டியிட்டது. கழுத்தில் இருந்த முத்தாரத்துடன் அவள் கள்ளச் சிரிப்பும் சேர்ந்து மின்னியது. வளைக் கரங்களின் கலகலப்புடன் அவள் உற்சாகமும் கலந்து சிறந்தது. நெற்றிப் பொட்டின் இளஞ் சிவப்பை அவள் கன்னத்தின் நாணச் சிவப்பு தோற்கடித்தது. தலையில் அவள் சூடியிருந்த கதம்பத்திலிருந்து பரவிய நறுமணம் போல் அவளுடைய குதூகலம் நாற்றிசையும் பரவி குணசிலனையும் ஆட்கொண்டது. இன்னதற்கு என்று தெரியாமலே அவன் ஆனந்தப்பட்டான்.

படியேறி வந்த அவனை உரிமையோடு கையைப் பிடித்து அழைத்துப் போனாள் அவள். ''சிறைப்பட்டிருந்த நம் காதலுக்கு விடுதலை கிடைத்து விட்டது'' என்று கிசுகிசுத்தாள்.

குணசிலன் அதிர்ச்சி அடைந்தான்.

'' வாங்க, மாப்பிள்ளை !'' என்று உற்சாகமாகக் குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே இருந்து வந்தார் ராமலிங்கம்.

குணசிலனுக்குத் 'திக்'கென்று இருந்தது. 'மாப்பிள்ளையாமே! என்ன நடந்தது இங்கே ?'

அப்பாவின் குரல் கேட்டதும் அவன் கையை விட்டு விட்டுக் காலில் விழுந்தாள் கமலா. பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். எழுந்ததும் நாணத்துடன் ஒதுங்கி நின்றாள்.

''உங்க அக்கா வந்துட்டுப் போய் முக்கால் மணி நேரம்தான் இருக்கும். அவங்க அந்தண்டை போனதும் கமலா வீட்டுக்கு வந்து விட்டாள்.''

''என்ன...என்ன சொன்னாள் சாரு?'' தயக்கமும் தடுமாற்றமுமாகக் கேட்டான் குணசிலன்.

''நல்ல சேதிதான். கல்யாணம் பற்றிப் பேசி விட்டுப் போகத்தான் வந்தாங்க. கமலா கட்டிக்கிட்டு இருக்கிறதுகூட அவங்க கொடுத்த சேலைதான். இப்படி வந்து பாருங்க'' என்றார் ராமலிங்கம்.

உள்ளே எட்டிப் பார்த்தான் குணசிலன். மிகப் பெரிய வெள்ளித் தட்டில் சந்தனக் கிண்ணம், பன்னீர்ச் செம்பு, ஆப்பிள், ஆரஞ்சு, வாழைப் பழம், புஷ்பம் இவற்றுடன் ஒரு ரவிக்கைத் துண்டும் திறந்த நகைப் பெட்டியும் இருந்தன. நகைப் பெட்டியில் வந்த முத்தாரம்தான் கமலாவின் கழுத்தில் ஏறி இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வதில் குணசிலனுக்குச் சிரமமிருக்கவில்லை. அவன் இதயம் சில்லிட்டது.

''பெரிய பெரிய கம்பெனிகளையெல்லாம் நிர்வகிக்கிறீங்களே, எப்படி இருப்பாங்களோன்னு நெனச்சேன்.... சர்வ சாதாரணமாச் சிரிக்கச் சிரிக்கப் பேசினாங்க !''

குணசிலனின் உள்ளம் அழுதது. இதற்குள் ராமலிங்கத்தின் மனைவி மதுரம் அவர் அருகே வந்து நின்று கொண்டாள். '' 'என் தம்பியை மாப்பிள்ளையாகக் கொள்கிறதிலே ஆட்சேபணை இல்லையே' என்று கேட்டாங்க. 'இதென்ன கேள்வி' என்று நினைத்துக் கொண்டேன். 'இப்படி ஒரு சம்பந்தம் கிடைக்கக் கொடுத்து

# முப்பது




**அவருக்கு 30 வருடங்களாக இன்பம் ஊட்டி வருகிறது பார்லே பிஸ்கெட்...**






...ஆனால் இப்போதுதான் அவர்களுக்கு கிடைக்கின்றன பல ரகங்கள்—அத்துடன் அவற்றைப்பகிர்ந்து இன்புற ஒரு பெரிய குடும்பம். அவர் சுவைத்து மகிழ்வது **ஜெ:.ப்ஸ், ஓர்லே, சீஸ்லிங்ஸ், ஸ்பின்–ஹெச்—** பாரதத்தின் முதன்மையான உப்பு பிஸ்கெட்டுகள்—குறிப்பாக **க்ரூகோமற்றும் மொனேகோ** —பாரதத்திலே உச்ச விற்பனையுடைய இனிப்பு மற்றும் உப்பு பிஸ்கெட்டுகள். ஆனால் அவர் கருத்து உங்களுக்கு வழி காட்டத் தேவையில்லை—அவை யாவற்றையுமே நீங்கள் ருசித்துப் பாருங்கள். உங்கள் சுவைக்குகந்ததை நீங்களே கண்டறியுங்கள். அவை யாவுமே பாரதத்தின் மிக நவீனமான பிஸ்கெட் தொழிற்சாலையில் உன்னதமாகத் தயாரிக்கப்பட்டவை.










**பிஸ்கெட்**

வாங்குக இன்றே, பார்லே நன்றே !







everest/566 a/PP tam

வைக்கணுமே எங்க கமலாவுக்கு' அப்படீன்னு சொன்னேன்'' என்றாள்.

''சீக்கிரமா நாள் பார்க்கச் சொல் விட்டுப் போயிருக்காங்க'' என்றார் ராமலிங்கம்.

குணசீலன் ராமலிங்கத்தையும் கமலாவையும் மதுரத்தையும் சீர் வரிசைகளையும் மாறி மாறி வெறித்துப் பார்த்தான். அவனுக்குத் தலை சுற்றியது, வயிற்றைப் பிசைந்தது, நெஞ்சை அடைத்தது. அத்தனைக்கும் மேல் கோபம் பொங்கிக் கண்கள் சிவந்தன.

சிரமப்பட்டுத் தன்னைச் சமாளித்துக் கொண்டு வாசலை நோக்கி நடந்தான்.

'' எங்கே கிளம்பிட்டீங்க? உங்களுக்காகத்தான் பாயசம் வைச்சிருக்கேன். ஒரு வாய் சாப்பிட்டு விட்டுப் போகலாம் '' என்றாள் மதுரம்.

'' எனக்கு மனசு இப்போ சரியில்லை. அப்புறம் வந்து சந்திக்கிறேன்'' என்று கூறிப் படிகளில் இறங்கினான் குணசீலன்.

கமலா பின்னோடு ஓடி வந்தாள். ''நான் முதலில் மாட்டேன் என்றுதான் சொன்னேன். அப்பாவும் அம்மாவும் கேட்கவில்லை. வற்புறுத்தி அணியச் சொல்லி விட்டார்கள்.''

குணசீலன் கோபத்தை மென்று விழுங்கி விட்டுச் சொன்னான்: ''கமலா, உன் பேரில் தப்பு இல்லை. எது நடக்க வேண்டும் என்று அல்லும் பகலும் நீ கனவு கண்டு கொண்டிருக்கிறாயோ, அது நடந்து விட்டதாக அவர்கள் சொன்னவுடன் நீ ஏமாந்து விட்டாய். நான் வருகிறேன்.''

அவன் கரத்தைப் பற்றி விரல்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் அவள். ''ஒருவேளை உங்கள் அக்கா தன் பிடிவாதத்தைத் தளர்த்தித் தானும் கல்யாணம் செய்து கொள்வதென்று முடிவு செய்திருக்கலாம் அல்லவா? அதை இங்கே சொல்லக் கூச்சப்பட்டுக் கூறாமல் இருந்திருக்கலாமல்லவா ?''

'அப்படியும் இருக்குமா ? ஒருவேளை வேணுகோபால் அவள் மனத்தை மாற்றுவதில் வெற்றி கண்டுவிட்டாரோ ?' — நினைத்த போதே அவனுக்குச் சந்தோஷத்தில் உடல் சிலிர்த்தது.

''கமலா ! நீ சொல்கிறபடி மட்டும் நடந்து விட்டால் அரை வீசைச் சர்க்கரையை நீ விழுங்கியாக வேண்டும். நானே என் கையால் அள்ளி அள்ளி உன் வாயில் போடப் போகிறேன்!'' என்று சொல்லி விட்டு வெகு வேகமாக நடந்தான் குணசீலன். பஸ்ஸுக்குக் காத்திருக்கப் பொறுமையின்றி ஒரு டாக்ஸி பிடித்து விலாசத்தைச் சொன்னான்.

**(தொடரும்)**

## ராஜாஜியைக் கவர்ந்த புத்தகங்கள்

என்னைக் கவர்ந்த அல்லது பண்படுத்திய புத்தகங்களை நான் எவருடைய தூண்டுதலினாலோ அல்லது புத்திமதியினாலோ படிக்கவில்லை. தற்செயலாகத்தான் நான் அவற்றைப் படிக்க நேரிட்டது.

நான் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தபோது என் சக வக்கீல் ஒருவரின் வீட்டுக்குச் சிறிது நேரம் பேசிவிட்டு வருவதற்காகச் செல்வதுண்டு. ஒரு நாள் அவர் வீட்டில் பல பேப்பர்களின் குவியலிலிருந்து தோரோவின் '' டியூட்டி ஆப் டிஸ்ஒபிடியன்ஸ்'' என்றபுத்தகத்தைக் கண்டெடுத்தேன். பிற்காலத்தில் இப்புத்தகம் வாழ்க்கைப் பாதையைக் காட்டுவதாகவே ஆகிவிட்டது.

நான் சிறைச்சாலைக்குச் செல்லும் போது மிகக் குறைந்த புத்தகங்களையே என்னுடன் எடுத்துச் சென்றிருந்தேன். ''ராபின்சன் குருசோ'' என்ற புத்தகமும் அதில் ஒன்று. இப்புத்தகத்தை நான் சிறு பையனாக இருந்தபோது படிக்காமல் இருந்ததை என் அதிர்ஷ்டவசமாகவே இப்போது கருதுகிறேன். ஏனெனில், அப்போது நான் இப்புகழ்பெற்ற புத்தகத்தைப் படித்திருந்தால் குழந்தைகளுக்கான ஒரு சாதாரணக் கதைப் புத்தகமாகவே அதனைக் கருதியிருப்பேன். ஆனால், இப்போதோ ஆஸ்திக உணர்வளிக்கும் அசைக்க முடியாத செல்வம் அதில் இருப்பதை என்னால் காண முடிகிறது. இன்னொரு புத்தகம் ''தி டிரயல் அண்ட் டெத் ஆப் சாக்ரடீஸ்'' என்பது. இப்புத்தகம் சிறியதாக இருந்தாலும் இதன் மதிப்பு மிகப் பெரிது. இதை நான் எதிர்பாராதவிதமாகத் தான் படிக்க நேரிட்டது. மற்ற எல்லாப் புத்தகங்களையும்விட அதிகமாக இப்புத்தகம்தான் என்னை உருவாக்கி யிருக்கிறது.



நான்காவதாக ஜே. எஸ். மில் என்பாரின் ''லிபர்ட்டி'' என்னும் புத்தகத்தைக் குறிப்பிடுவேன். சாக்ரடீஸைப் பற்றிய புத்தகம் என்னை மனமுருகச் செய்தது போல இப்புத்தகம் என்னை வெகுவாகக் கவர்ந்து விட்டது. சத்தியத்தின் மேல் உள்ள நம்பிக்கையை இவ்விரு தத்துவ ஞானிகளும் எனக்கு உணர்த்தினர்.

கடைசியாக மார்க்கஸ் அரேலியஸின் ''மெடிடேஷன்ஸ்'' என்னும் புத்தகத்தைக் குறிப்பிட்டாக வேண்டும். துன்பமும் நிலைமையும் என்னைச் சூழும்போது நான் அவற்றிலிருந்து விடுபட்டு சாந்தி பெற இப்புத்தகத்தையே நாடுகிறேன்.

ஆங்கிலப் புத்தகங்கள்தாம் என்னை வளப்படுத்தின என்று எண்ண வேண்டாம். என் தாயும், இரு அத்தைமார்களும் எனக்குக் கூறிவந்த அறவுரைக் கதைகள்தாம் என்னை மேம்படச் செய்தன.

- ராஜாஜி தமது நாற்பதாவது வயதில் எழுதிய ஆங்கிலக் கட்டுரையைத் தமிழில் தருபவர்:

நெல்லை ச. நல்லசிவன்

# இனம்

## உங்களுக்குப் பிடித்தமான
## பினகா டாப் டூத் பேஸ்ட்

நீங்கள் விரும்பும்

## பினகா டால்க்குடன்

இனம்




அந்த மெல்லிய, துல்லிய மணங்கமழ், மங்கல பினகா டால்க்;
மேனியை தழுவிடத் தூண்டும். இதனுடன் நழுவிட முடியா
நல்ல வாய்ப்பாக இப்போது உங்களுக்கு பிடித்தமான பினகா டாப்
டூத்பேஸ்ட் இனமாக கிடைக்கிறது. திரளென மொய்க்குது கூட்டம்.
தேடிப் பெறுக இன்றே, சலுகையின் பலனே நன்றே

தமிழ்நாடு. கேரளம், மகாராஷ்டிரம் மற்றும் மேற்கு வங்காளம்
ஆகிய மாநிலங்களுக்கு மட்டுமே, ஸ்டாக் உள்ளவரை இந்த சலுகை

C I B A Cosmetics



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

## ராஜாஜி

9—(I)

ஸ்விட்ஸர்லாந்து நாட்டில் ஒரு சமயம் நடந்த சம்பாஷணையில் காந்தியடிகள் சொன்னதன் சாராம்சம்:

சத்தியமே தெய்வம் என்று ஏன் சொல்கிறாய் என்பது உங்கள் கேள்வி. நான் சிறுவனாயிருந்தபோது ஹிந்து சம்பிரதாயப்படி ஆண்டவனுடைய ஆயிரம் நாமங்களைப் பாடக் கற்றேன். ஆண்டவனுக்கு நாமங்கள் ஆயிரம் அல்ல. இன்னும் அதிகத் தொகையே. உலகத்தில் எத்தனை ஜீவன்கள் இருக்கின்றனவோ அத்தனை ஜீவன்களின் பெயர்களும் கடவுளின் பெயர்கள் ஆகும். இதனாலேயேதான் ஆண்டவனைப் பெயரில்லாதவன் என்கிறோம். ஆண்டவன் அநேக ஸ்வரூபம் கொண்டவன். அதனாலேயே அவனை ரூபமற்றவன் என்கிறோம். அவன் ஆயிரக் கணக்கான பாஷைகள் பேசுகிறான். இதனால் அவனைப் பேச்சற்றவன் என்கிறோம்.

நான் இஸ்லாம் மதத்தை ஆராய்ந்தேன். அதிலும் ஆண்டவனுக்கு அநேகப் பெயர்கள் உண்டு என்று அறிந்தேன். அன்பே கடவுள் என்பார்கள். அதற்கும் நான் ஆமென்று சொல்வேன். ஆயினும் என்ன காரணமோ, என் மனத்தில் சத்தியமே கடவுள் என்கிற கருத்து உறுதிப்பட்டு வந்திருக்கிறது. மற்றெல்லாக் குணங்களையும் விட இதுவே அவனுடைய முக்கிய இலக்ஷணம் அல்லது பண்பு என்பது என்னுடைய எண்ணம். நம் அறிவைக் கொண்டு நாம் கடவுளை விளக்க முடியுமானால் உண்மையே கடவுளின் முழு விளக்கம் என்று சொல்ல வேண்டும். இரண்டு வருஷத்துக்கு முன் வரையில் இது என் அபிப்பிராயமாக இருந்து வந்தது. பிறகு அதற்கும் ஒரு படி மேலே சென்று விட்டேன். சத்தியமே கடவுள் என்கிற முடிவுக்கு வந்தேன். சத்தியமே பகவானுடைய உருவம் என்பது என்னுடைய கொள்கையாயிற்று. பல்வேறு மூர்த்தியாக ஆண்டவனைப் பாவிக்கிறார்கள் அல்லவா? அந்த முறையில் என் இஷ்டமூர்த்தி சத்தியம்.

அன்பை ஏன் அவனுடைய வடிவமாக வைத்துக் கொள்ளக் கூடாது என்று கேட்கலாம். அன்புக்கு உலகத்தில் பல பொருள் கொள்வார்கள். ஒரு பொருளில் அன்பு காம வேகம் ஆகிறது. உண்மையில் அன்பு வெறும் காம வேகம் ஆகுமா? இல்லை. ஆனபோதிலும் சத்தியம் இம்மாதிரி பல பொருள்களில் அடிபடுவதில்லை. நாஸ்திகர்களும் கூடச் சத்தியத்தை வழிபடுகிறார்கள். ஏன், சத்தியத்தில் அவர்களுக்குள்ள தீவிரப் பற்றினால் அவர்கள் உள்ளத்தில் எழும் சந்தேகத்தை வைத்து, கடவுளே இல்லை என்ற அளவுக்குச் சொல்கிறார்கள். சத்தியத்தில் அவர்களுக்குள்ள அபார மதிப்பும் பற்றும் இவ்வளவு தூரம் செல்கிறது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் உலகத்தில் அனைவரும் ஆராதிக்கும் பொருள் சத்தியமானபடியால் அதுவே கடவுளின் சரியான வடிவம் என்று என் கருத்தில் பட்டது. சத்தியமே தெய்வம் என்று சொல்ல ஆரம்பித்தேன். கடவுளின் பல பண்புகளில் சத்தியம் ஒன்று என்று சொல்லி வந்ததை விட்டு விட்டுச் சத்தியமே கடவுள் என்று மாற்றிக் கொண்டேன்.

ஆனாலும் ஒன்று உறுதியாகச் சொல்வேன். கடவுளுக்கு அதாவது சத்தியத்துக்கு ஏது நேர் வழி என்று பார்த்தால் அன்பு ஒன்றே சரியான நேர் வழி. சத்தியத்தைப் பற்றி யாரும் விவாதிப்பதில்லை. அதைக் குறை கூறுவாரே இல்லை. நாஸ்திகர்களும் கூட சத்தியம் என்றால் அதற்குத் தலை வணங்குகிறார்கள்.

ஓட்டுக் கூரையின் கீழ் பிறந்த ராஜாஜி, பாரத நாட்டிலேயே ஓர் ஒப்பற்ற மாளிகை என்று கருதத் தக்க கவர்னர் ஜெனரலின் குடியிருப்பிலும் தங்கி இருந்திருக்கிறார். அவர் வசித்த – வசிக்கிற – வீடுகள் பற்றி இதோ சில ருசிகரமான தகவல்கள்:

# ஓட்டுக் கூரையும்



## பிறந்த வீடு

சேலம் ஜில்லாவில் ஹோசூரிலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள துரைப்பள்ளி என்ற குக்கிராமத்தில் தொண்ணூற்றியொரு ஆண்டுகளுக்கு முன் பிறந்தார் ராஜாஜி. அவர் பிறந்த வீடு (படம்: மேலே) அவர் பிறந்தபோது எப்படி இருந்ததோ அப்படியே தான் இன்றும் இருக்கிறது. அந்தக் குக்கிராமத்திலிருந்துதான் ராஜாஜி ஹோசூருக்கு வந்து தமது பள்ளிப் படிப்பை முடித்தார். அந்தப் பகுதி மக்களின் தமிழ்ப் பேச்சில் கொஞ்சம் கன்னடமும், தெலுங்கும் கலந்த ஒரு மிச்ர நடையைக் காணலாம். ராஜாஜி அவ்வூரை விட்டு வெளியே வந்து எழுபத்தைந்து ஆண்டுகளாயினும் அவர் பேச்சில் இன்றும் ஹோசூர் தமிழ் நடையைக் காண்கிறோம். அவருடைய இஷ்ட தெய்வமான ஹனுமாரை இன்றும் அந்த ஹோசூர் மலைப் பகுதியில் காணலாம்.

## முதல் ஜாகை

கதீட்ரல் ரோட் - மியூஸிக் அகாடமி எதிரே - படம்: கீழே

சேலத்திலிருந்து வந்தபோது தேர்ந்தெடுத்த முதல் ஜாகை ஒரு கஸ்தூரிரங்க ஐயங்கார் அவர்களுக்குச் சொந்தமானது.





காந்திஜியை முதல் முதலாகத் தமிழ் நாட்டுக்கு அழைக்க ஏற்பாடு செய்திருந்த ராஜாஜி காந்திஜியை இங்கேதான் தங்கச் செய்திருந்தார். சங்கோசத்தின் காரணமாக ராஜாஜி பின்னணியிலேயே இருந்தார். ஆனால் மகாதேவ தேசாய், ராஜாஜியின் பண்பைப் புரிந்து கொண்டு காந்திஜியிடம் அவரைப் பற்றிச் சொல்லியதோடு, 'You should cultivate this man' என்றும் சொன்னார்.

காந்திஜி – ராஜாஜி நெருக்கத்துக்கு வித்திட்ட வீடு இப்போது இல்லை. அங்கு ஒரு நினைவுச் சின்னம்தான் உள்ளது.

## வேங்கட விலாஸ்

லஸ் சர்ச் ரோடும் மௌபரீஸ் ரோடும் இணையும் இடத்தருகே உள்ளது இது. இங்கேதான் ராஜாஜி ஒத்துழையாமை இயக்கத்தில் சேரும் எண்ணத்துடன் வக்கீல் தொழிலைக் கைவிட்டார். இந்த வீட்டுக்கு அந்தக் காலத்திலேயே கொஞ்சம் வாடகை அதிகம்தான்.

## "ஜெம்"

(70, பூந்தமல்லி ஹைரோட், சென்னை - படம்: மேலே)

பங்களா, அப்போது எப்படிச் சிவப்பு வண்ணம் பூசப்பட்டிருந்ததோ அதே சிவப்பு வர்ணத்துடன் எந்த வித மாற்றமும் இல்லா

மல் இன்றும் இருந்து வருகிறது. இந்த வீட்டில இப்போது கடந்தபன்னிரண்டு வருடங்களாக வசித்து வரும் ஸ்ரீமதி சி. எஸ். நாராயணி அம்மாள், "'ஆவி' வந்த வீடு" என்கிறார். வீட்டுக்காரர் ஸ்ரீமதி வேதவல்லி.

**புதுப்பாளையத்தில்...**

சேலம், புதுப்பாளையத்தில் கட்டப்பட்டது சொந்த வீடு. சில ஆண்டுகள் கழித்து





# ஒப்பற்ற மாளிகையும்

மீண்டும் சென்னைக்கு வந்தபோது தியாகராய நகர் பஸ்லுல்லா ரோட், 61ம் இலக்கமுள்ள வீட்டில் தங்கினார். இந்த வீட்டை ஏற்கனவே ராஜாஜியின் புதல்வர்களில் ஒருவர் வாங்கியிருந்தார். பக்கத்து 60ம் நம்பர் இல்லம் அப்போது 'கல்கி'க்குச் சொந்தம். 'கல்கி', மாம்பலம் போக் ரோடில் புதிய இல்லத்துக்கு இடம் பெயர்ந்ததும், ராஜாஜி இந்த 60ம் நம்பர் இல்லத்தைக் கல்கியிடமிருந்து வாங்கி, அங்கே தங்க ஆரம்பித்தார்.

**60, பஸ்லுல்லா ரோட்**

ராஜாஜி இரண்டு தடவைகளில் சென்னை மாநில முதல் மந்திரி பதவி வகித்தபோது தங்கி யிருந்த இல்லம் இது. அவருக்குப் பிடித்தமான ஊஞ்சல் இன்னும் அப்படியே முன் ஹாலில் தொங்குகிறது. கவர்னரின் மனைவி லேடி நை தீட்டிய ராஜாஜியின் வண்ண ஓவியம் இந்த ஹாலில் இன்னும் பளிச்சென்று இருக்கிறது.

மாடியில் இவர் வரிசை வரிசையாக எத்தனையோ அபூர்வ புத்தகங்களைப் படித்து விட்டு அடுக்கியிருக்கிறார். அவை அப்படியே இருக்கின்றன. இன்றைக்கும் சேத்துப்பட்டியிலுள்ள தம் புதிய ஜாகையிலிருந்து. 'மூன்றாவது தட்டில் நான்காவதாக உள்ள புத்தகத்தை எடுத்து அனுப்பு' என்று தகவல் கொடுப்பார். நல்ல ஞாபகம். இவருக்கு மிகவும் பிடித்த ஹனுமான் திருவுருவப் படமும் இந்த மாடி அறையை அலங்கரித்துக் கொண்டிருக்கிறது. இந்த வீட்டில் இப்போது ராஜாஜி அவர்களின் குமாரர் ஸ்ரீ நரசிம்மன் வசிக்கிறார். (படம்: இடது புறம்.)

**நௌரோஜி ரோட், சென்னை-31**

சமீப காலமாக ராஜாஜி தியாகராயநகரிலிருந்து வந்து சேத்துப்பட்டு பகுதியிலுள்ள இந்த வீட்டில் வசித்து வருகிறார். சந்தடி ஏதும் இல்லாத அமைதியான சூழ்நிலை. (படம்: மேலே)

**கல்கி தோட்டத்தில்...**

ராஜாஜிக்கு மிகவும் பிடித்தமான அறை. "இதுதான் என்னுடைய நெ. 10, டௌனிங் தெரு" என்று ராஜாஜி தம்மைக் காண வருவோரிடம் குறிப்பிடுவதுண்டு. பல பிரமுகர்களை ராஜாஜி சந்திக்கும் இடம் இதுதான். (படம்: கீழே)

— பட்டினத்தார்



# இரவிலே கடுமையாகும் இருமலை நிறுத்த அதிகச் சக்தி வாய்ந்த மருந்து!





இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரம் சிலிர்க்கிறது.



ஃபார்முலா 44 இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரத்திற்கு இதமளிக்கிறது.

இருமல் தொடங்கும் கட்டுப்பாட்டுக் கேந்திரத்திலேயே உடனடியாகவும், அதிகச் சக்தியுடனும் செயல் புரிகிறது விக்ஸ் ஃபார்முலா 44. எனவே உங்கள் இருமல் நின்று விடுகிறது.

அதேசமயம், இந்த நவீன இருமல் மிக்சரில் சேர்ந்துள்ள மருந்துப்பொருள்கள் உள்ளே ஊடுருவி, சுவாசக் குழாய்களின் அடைப்பை நீக்குகின்றன. வலியிருந்த மார்புச் சளியை அகற்றி தொண்டை, எரிச்சலுக்கும் இதமளிக்கின்றன.

அதிகச் சக்தி வாய்ந்த விக்ஸ் ஃபார்முலா 44 அருந்தி இரவில் கடுமையாகும் இருமலிலிருந்து விரைவிலே நிச்சயமான நிவாரணம் பெறுங்கள். அயர்ந்த உறக்கமும் உங்களுக்குக் கிடைக்கும்.




**விக்ஸ் பார்முலா 44 காஃப் மிக்சர்**

441R

# வாழ்க பல்லாண்டு

பிறந்த நாளன்று ராஜாஜிக்கு கார்ட்டூன்கள் மூலம் வாழ்த்துத் தெரிவிக்கும் மூவர்:

— சாமா, ரங்கா, வாசு




Ranga..








**உலகத் தலைவர்கள் ராஜாஜியைப் பார்க்கும் விதம் வேறு: எளியவரின் நோக்கில் அவர் தென்படும் விதம் வேறு. எளியாரின் நோக்கிலே மாமேதை ராஜாஜியிடம் உள்ள சில உன்னதமான குண இயல்புகள் பளிச்சிடுகின்றன.**

**கல்கி காரியாலயப் பூங்காவை அழகுற அமைக்கும் பணியில் தலைமைப் பொறுப்புள்ள திரு ஏகாம்பரம் கூறுகிறார்:**

நமது தோட்டத்துப் புல்வெளிகளில் நடப்பது என்றால் ராஜாஜி ஐயாவுக்கு அலாதிப் பிரியங்க. இப்போத்தான் ஒரு வருஷ காலமாக அவர் தள்ளாமையினாலே வரதில்லே. அதுக்கு முன்னாடி தினம் சாயங்காலம் புல்வெளியில் நடப்பார். இங்கே உள்ள துளசிச் செடிகள் கிட்ட நிற்பார். இலையைக் கிள்ள அவருக்கு மனசே வராது. செடிபேரிலே வலது கரத்தை ஒட்டி அப்புறம் உள்ளங்கையை முகர்ந்து பார்ப்பார். ஆற்றிலே நீரை அள்ளுகிற மாதிரி வாசனையை உள்ளங்கையால் அள்ளிவிடுவார்!

**ஸ்ரீ சதாசிவம் அவர்கள் இல்லத்தில் சமையல்காரராகப் பணியாற்றும் ஸ்ரீ கிருஷ்ணய்யர் பேசுகிறார்:**

ஒரு விசேஷத்துக்கு அக்கார வடிசல் பண்ணியிருந்தேன். 'கிருஷ்ணா, ரொம்ப நன்னா இருக்கு. ராஜாஜி ஒரு ஸ்பூனாவது சாப்பிட்டுப் பார்க்கணும்.' என்று பெரியவர் (ஸ்ரீ சதாசிவம்) சொன்னார். உடனே ஒரு கிண்ணத்தில் மூடி எடுத்துக் கொண்டு ராஜாஜி வீட்டுக்குப் போனேன். இரண்டே ஸ்பூன்தான் சாப்பிட்டார். "ரொம்ப நன்னா இருக்கு; ஆனால் கட்டெறும்பு வந்த வெல்லமோ?" என்று கேட்டார். "இருக்காதே?" என்றேன். "எதற்கும் நீ போய்ப் பார்" என்றார் ராஜாஜி.

அவர் சொன்னாரே என்று ஸ்டோர் ரூமில் வந்து பார்த்தேன். அவர் சொன்ன மாதிரியே வெல்லம் வைக்கிற பாத்திரத்தின் அடியில் நாலைந்து கட்டெறும்புகள் ஊர்ந்துகொண்டிருந்தன! ருசியில் 'இது கட்டெறும்பு வந்த வெல்ல' மென்று எப்படித்தான் கண்டு பிடித்தாரோ? நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது!

**ராஜாஜி தேர்தலை முன்னிட்டுச் சுற்றுப் பயணங்கள் மேற்கொள்ளும்போது அவருக்குக் கார் ஓட்டுபவர் ஸ்ரீ நடைபால். அவர் கூறுகிறார்:**

ஊர் போகும்போது ராஜாஜிக்குக் காரை நிதானமாக ஓட்டினால் பிடிக்காது. வேகமாகத்தான் ஓட்ட வேண்டும். பின் பக்கம் கால் வைக்கும் இடத்தில் இரண்டு ஸ்டூல்களை 'ஸீட்' உயரத்துக்குப் போட்டு அதன் மேல் மெத்தையை விரித்து விடுவேன். அகலமான கட்டிலாகி விடும். நீண்ட பிரயாணத்தின்போது படுத்துத் தூங்கிவிடுவார் ராஜாஜி.

# எளியவர் நோக்கில்......

ஒரு சமயம் திருச்சியிலிருந்து கரூர் போய்க் கொண்டிருந்தோம். ஒரு மாடு எதிர்பாராத விதமாய்க் குறுக்கே வந்து விட்டது. காரில் அது மோதாமலிருக்க பிரேக் போட்டு அதே சமயம் வண்டியை ஒடித்துத் திருப்பினேன். எவ்வளவோ முயன்றும் மாடு காரின் பக்க வாட்டில் இடித்து விட்டது. அதுவும் ராஜாஜி தலை வைத்துப் படுத்திருந்த பக்கத்திலேயே மோதிவிட்டது. மாடு ஓடிப்போயிற்று. கார் 'பாடி'யில் சொட்டை விழுந்திருப்பதைப் பார்த்தேன். அதே சமயம் ராஜாஜி அத்தனை அதிர்ச்சிக்கும் கண் திறவாமல் அமைதியாகப் படுத்திருப்பதையும் பார்த்து அதிசயப்பட்டேன். கொஞ்சமாவது அலட்டிக்கொள்ள வேண்டுமே? ஊஹூம்.

கரூரில் மீட்டிங் முடிந்து திருச்சியில் தங்கியிருந்த வீட்டுக்குத் திரும்பிய பிறகுதான் நிதானமாக அவர், "என்னப்பா? காருக்கு பலமான அடியா?" என்று கேட்டார்.

**ஆமதாபாத்தில் சிறிது காலம் குடியிருந்த ஸ்ரீமதி ராதா விசுவநாதன் சொல்கிறார்:**

ஒரு நாள் நாங்கள் சங்கர்லால் பாங்கர் வீட்டுக்குப் போயிருந்தோம். அந்த வீட்டில் பெண்மணிகள் எங்களை அன்புடன் வரவேற்று உபசரித்ததுடன் அருமையாகத் தோசை வார்த்துப் போட்டார்கள்.

"இத்தனை நன்றாகத் தமிழ் நாட்டு உணவான தோசையை வார்க்க எங்கே கற்றுக் கொண்டீர்கள்?" என்று நான் வியப்புடன் கேட்டேன்.

"ராஜாஜி இந்த வீட்டில் சில நாட்கள் தங்கி யிருந்தார். அப்போது அவர்தான் கற்றுக் கொடுத்தார்!" என்று பதில் கிடைத்ததும் பிரமித்துப் போனேன்.

உலக விவகாரங்களையெல்லாம் அலசுகிற அந்த அறிஞருக்குத் தோசை வார்க்கவும் தெரியும் என்றால் யாருக்குத்தான் பிரமிப்பாயிராது!

**ராஜாஜியைப் புகைப்படம் எடுக்கப்போன விசுவநாதனின் அனுபவம்:**

நான் அவரைப் படங்கள் எடுக்க ஆரம்பித்த சமயம் அறைக் கதவருகே ஒரு தலை எட்டிப் பார்த்தது. ராஜாஜிக்கு நகருக்குள் கார் ஓட்டும் ஸ்ரீ எல். செல்வதாஸ்தான் அப்படித் தயங்கித் தயங்கி நின்றார். கடைசியில்

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''ஐயாவைப் படம் எடுக்கிறபோது நானும் ஒண்ணு ஐயாவோடு சேர்ந்து எடுத்துக்கறேனுங்க'' என்றார்.

''பேஷாக எடுத்துக்கொள்ளேன் அப்பா!'' என்ற ராஜாஜி, நான் புகைப்படம் எடுப்பதற்குத் தகுந்த இடங்களில் மாற்றி மாற்றி நின்றும் உட்கார்ந்தும் பலவிதமாக 'போஸ்' கொடுத்தார்.

பதினைந்து படங்களை நான் எடுத்து முடிப்பதற்கு முன் ராஜாஜி மூன்று தடவைகளில் என்னைக் கேட்ட ஒரே கேள்வி: ''டிரைவர் என் அருகில் நிற்பது போல் படமெடுத்தாகிவிட்டதா?● (புகைப் படம்)

ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ணய்யா, ராஜாஜி முதல் அமைச்சராக இருந்த போது பர்ஸனல் கிளார்க்காக வேலை பார்த்தார். பின்னால் பதவி உயர்வு பெற்று அஸிஸ்டெண்ட் செகரட்டரியாக ரிடையரான அவர் கூறுகிறார்:

ராஜாஜி பதவி ஏற்றுக்கொண்டு தம் அறையில் வந்து அமர்ந்ததும் உள்ளே போய் சற்றுத் தள்ளி நின்றேன். ''மிஸ்டர் கிருஷ்ணையா! என் கீழ் நேரடியாக வேலை செய்பவர்கள் அனைவரின் பெயர்களையும் ஒரு கடுதாசியில் குறித்து என்னிடம் கொடுத்து வையுங்கள். நான் ஒவ்வொருவரையும் பெயரைச் சொல்லி அழைத்துப் பழக விரும்புகிறேன். பியூன் என்றோ, கிளார்க் என்றோ உத்தியோகப் பதவிகளைக் குறிப்பிட்டு, அழைப்பது எனக்குப் பிடிக்காது'' என்றார். இத்தனை நாட்களாக ஒருவித இயந்திர கதியில் இயங்கி வந்த காரியாலயத்தில் இனி ஜீவனும் மனிதாபிமானமும் நிறைந்திருக்கும் என்ற மகிழ்ச்சி அந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் எனக்கு ஏற்பட்டது.

வெளியூர்களுக்கு முகாம் கிளம்பும்போது நடைமுறைச் சட்டப்படி முன்பணம் வாங்கிக் கொள்வோம். முகாமிலிருந்து திரும்பி வந்த பிறகு பிரயாணப்படி 'பில்' போட்டு மேற்கொண்டு வரவேண்டிய தொகையைப் பெற்றுக் கொள்வோம். முதல் மந்திரிக்கும் இந்தச் சட்டம்தான். 'டூர்' போய்த் திரும்பியதும் அவரிடம் பிரயாணப்படி 'பில்' எடுத்துப் போனால் ''கிருஷ்ணையா! இந்த டூரில் நமக்கு 'ஆக்சுவலா'கச் செலவான பணம் எவ்வளவு?'' என்பார். உடனே நான் வைத்திருக்கும் குறிப்புகளைப் பார்த்து அந்தத் தொகையைச் சொல்வேன். விதிகளின்படி தயாரிக்கப்பட்டிருக்கும் பில் தொகையைவிட அந்தத் தொகை குறைவாக இருக்கும். உடனே அந்தப் பில்லில் வரவேண்டிய அதிகப்படித் தொகையை வாங்க வேண்டியதில்லை என்பதற்கான குறிப்பை எழுதி அனுப்பிவிடுவார். பொதுப் பணத்தைக் கையாளுவதில் அவர் அவ்வளவு கவனம் செலுத்துவார்.











மலபாரைச் சேர்ந்த ஸ்ரீ சங்கரனுக்கு 1933ல் ராஜாஜிக்குச் சில விஷயங்களை டைப் செய்து கொடுக்கும் வாய்ப்புக் கிட்டியது. மூன்று மாதங்கள் கழித்து, கள்ளிக்கோட்டையிலுள்ள நண்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதினார் ராஜாஜி. நாம் கள்ளிக்கோட்டைக்கு வந்திருந்த போது நமக்கு உதவி செய்த சங்கரன் என்ற இளைஞன், நம்முடன் வந்து தங்கி அந்தரங்கச் செயலாளனாகப் பணியாற்ற இசைவானா என்று கேட்டிருந்தார். இப்படி ஒரு பேரதிர்ஷ்டம் தேடி வரும் பாக்கியம் பெற்ற சங்கரன் இன்று மெயில் பத்திரிகைக் காரியாலயத்தில் பணியாற்றுகிறார். அவர் கூறுகிறார்:

அவர் சிறை புகுந்து விட்ட போதெல்லாம் என்னைத் திருச்செங்கோடு ஆசிரமத்துக்கு அனுப்பி விடுவார். சிறைச்சாலையிலிருந்து அப்போதெல்லாம் வாரம் ஒரு முறை ஒரு கடிதம்தான் எழுதலாம் என்ற விதி. ஆகவே ராஜாஜி எனக்கு எழுதும் கடிதங்களெல்லாம் பல பக்கங்கள் கொண்ட நீண்ட கடிதங்களாக இருக்கும். பல நண்பர்களுக்குத் தெரிவிக்கப்பட வேண்டிய விஷயங்களை, எனக்காகவே எழுதுவது போல் நாசூக்காக எழுதுவார்.

ஒரு சந்தர்ப்பத்தில் ராஜாஜி அவர்களைச் சிறையில் சந்திக்கப் போன அவருடைய உறவினர் ஒருவரிடம், அந்த ஜெயில் அதிகாரி ''யார் இந்தச் சங்கரன்? அவருக்கு ஏன் ராஜாஜி நீளமான கடிதங்களை எழுதுகிறார்?'' என்று விசாரித்தாராம்.

ஒரு நாள் இரவு பாசஞ்சர் ரயிலில் நாங்கள் இருவரும் ஈரோடிலிருந்து திருச்சிராப்பள்ளிக்கு வந்தோம். வண்டி தாமதமாக வந்ததால் திருச்சிக்கு வந்தபோது இரவு மணி இரண்டாகிவிட்டது. ஸ்டேஷனுக்கு அருகே உள்ள ராஜாஜியின் ஆப்த நண்பரான திரு டி.. எஸ். எஸ். ராஜன் அவர்கள் ஜாகைக்குத்தான் ராஜாஜி போவாரென்று நான் நினைத்தேன். ஆனால் அவர், 'இந்த நேரத்தில் அவரைப் போய்த் தொந்தரவு செய்வது உசிதமில்லை' என்று சொல்லி விட்டு, துண்டை

அப்படியே பிளாட்பாரத்தில் விரித்துப் படுத்து விட்டார்.

விடியும் தறுவாயில் ஒரு டிக்கட் பரிசோதகர் அந்தப் பக்கம் வந்தார். ஆழ்ந்த நித்திரையிலிருந்த ராஜாஜியை எழுப்பிப் பிளாட்பாரத்தில் படுக்கக் கூடாது என்று கடிந்து கொண்டார். ''அப்படியா? இதோ எழுந்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டு, என்னிடம் ''இனிமேல் ராஜன் அவர்கள் வீட்டுக்குப் போகலாம்'' என்று கிளம்பினார்.

**ராஜாஜியிடம் பர்ஸனல் கிளர்க்காகப் பணி புரிந்து இன்று செகரடேரியட் சூப்பிரண்டெண்டாக (தேறாம்) விளங்கும் திரு கே. வி. சீனிவாசன் சொல்லுகிறார் :**

ஒரு மகாநாட்டில் ராஜாஜிக்கு 'பாட்ஜ்' அணிவித்தார்கள். நிகழ்ச்சி முடிந்த பிறகு அந்த 'பாட்ஜை'க் கழற்றி என்னிடம் கொடுத்தார். அதை வாங்கி என் சட்டைப் பையில் போட்டுக் கொண்டேன்.

அன்று மாலை வேறு ஏதோ விஷயம் பேசிக் கொண்டிருந்தபோது திடீரென்று என்னைப் பார்த்து ''அந்த 'பாட்ஜ்' இருக்கிறதா?'' என்றார். ''இருக்கிறது'' என்றேன். ''வைத்திரு. அதைக் காட்டிலும் அதிலுள்ள சேப்டி பின் ஜாக்கிரதை. பயன்படும்'' என்றார்.

சில நேரங்களில் தொடர்ந்து ஒரு மணி நேரத்துக்கு மேலாகவும் சுருக்கெழுத்தில் 'டிக்டேட்' பண்ணுவார். கடல் மடை திறந்த வெள்ளம் போல் விஷயம் வரும். இடையில் திடீரென்று ''வேண்டுமென்றால் சில நிமிடங்கள் வெளியே போய்விட்டு வாயேன்'' என்பார். சுருக்கெழுத்தாளர் அலுப்படைந்து விடக்கூடாதே என்பதற்காக இந்த 'இடைவேளை' வழங்குவார்.

**1930ல் பியூனாக இருந்து பிறகு சேவ்தாராகப் பதவி உயர்வு பெற்று இன்று கௌன்சில் துபாஷாக விளங்கும் கோவிந்தன் நாயர் பேசுகிறார் :**

இரண்டாவது தடவையாக செக்ரடேரியட்டில் நுழைந்து பதவி ஏற்றுக் கொண்டு தம் அறைக்கு வந்து கொண்டிருந்தார் ராஜாஜி. அதிகாரிகள் அவர் கூட வந்து கொண்டிருந்தார்கள். நான் சற்றுத் தள்ளிப் பின்னால் சென்று கொண்டிருந்தேன். பக்கத்தில் வந்து கொண்டிருந்த அதிகாரி ஒருவரிடம், ''நான் போன தடவை இங்கிருந்த போது கோவிந்தன் நாயர் என்ற ஆசாமி என் கூட இருந்தான். அவன் இப்போது எங்கே வேலை செய்கிறான்? அவனையே மீண்டும் என்னிடம் அனுப்பி வைக்க முடியுமா?'' என்றார். என் உடம்பு புல்லரித்தது. ''இதோ இருக்கிறேன் ஐயா!'' என்று அவர் முன் போய் நின்றேன்.

வெளியூர் 'டூர்' போயிருந்தோம். ஓர் ஊரில் சற்று நேரம் தங்கிவிட்டு, மீண்டும் கிளம்ப வேண்டும். சாப்பாடு அங்கே முடித்தாக வேண்டும். முதலமைச்சர் உட்பட எல்லோரும் சாப்பிட உட்கார்ந்து விட்டார்கள். நான் சங்கோசத்துடன் வெளியே நின்று கொண்டிருந்தேன். ராஜாஜி அவர்கள் சுற்றிப் பார்த்துவிட்டு, ''கோவிந்தன் நாயர் எங்கே?'' என்றார். நான் உள்ளே போனேன். ''சீக்கிரம் சாப்பாட்டை முடித்துக்கொள். உட்கார்'' என்றார். அவருக்கு எதிரே இருந்த இலைதான் காலியாக இருந்தது. நான் தயங்கினேன். ''அந்த இலையிலேயே உட்கார்'' என்று ஆக்ஞை பிறப்பித்தார். 'இவரல்லவா மகான்' என்று நினைத்துக் கொண்டு அந்த இலையில் உட்கார்ந்தேன்.

எச். எம். ஹூட் சீப் செக்ரடரியாக இருந்த காலம். ஒரு நாள் மாலை வீட்டுக்குக் கிளம்பும் நேரத்தில் முதலமைச்சர் என்னைக் கூப்பிட்டு ஒரு தஸ்தாவேஜுப் பெட்டியைக் கொடுத்தார். அதை வீட்டுக்குப் போகும் வழியில் சீப் செக்ரடரி இல்லத்தில் சேர்ப்பிக்கும்படி சொன்னார். அது அவசரமான ஃபைல் என்றோ, உடனடியாக சீப் செக்ரடரி பார்க்க வேண்டுமென்றோ சொல்லவில்லை.

நான் அப்போது தேனாம்பேட்டையில் வசித்து வந்தேன். சீப் செக்ரடரி ஹூட் அடையார் ஹவுஸில் இருந்தார்.

நான் சைக்கிளில் வீட்டுக்குப் போனேன். அன்று பார்த்துச் சில உறவினர்கள் வந்திருந்தார்கள். அவர்களுடன் பேசிக்கொண்டிருந்துவிட்டுச் சற்று சாவகாசமாக அடையார் ஹவுஸுக்குப் போனேன்.

அங்கே சீப் செக்ரடரி தாமதமாக வந்தேன் என்று என்மேல் சீறி விழுந்தார். அப்புறம்தான் எனக்கு விஷயம் புரிந்தது. என்னிடம் பெட்டியைக் கொடுத்து அனுப்பியவுடன் ராஜாஜி அவர்கள் சீப் செக்ரடரிக்கு டெலிபோன் செய்திருக்கிறார்.

மறு நாள் காலையில் வழக்கம் போல் தியாகராயநகர் பஸ்லுல்லா சாலையிலுள்ள முதலமைச்சர் இல்லத்துக்குச் சென்றேன்.

காம்பௌண்டுக்குள் நுழையும்போதே ராஜாஜியின் குமாரர் திரு நரசிம்மன் என்னைப் பார்த்து விட்டார். ''என்னப்பா கோவிந்தன் நாயர், சீப் செக்ரடரி உன்னை ரொம்பப் பாராட்டி விரிவாக ஒரு கடிதம் எழுதி அனுப்பி யிருக்கிறாரே!'' என்று சிரித்துக்கொண்டே சொல்லி விட்டுப் போனார். என் உடம்பு நடுங்க ஆரம்பித்தது. முதலமைச்சர் என்ன சொல்லுவாரோ என்று!

முதலமைச்சர் தம் ஆபீஸ் அறைக்கு வந்து விட்டார். நான் தயங்கியவாறு ஜன்னலுக்கு வெளியே நின்று கொண்டிருந்தேன். அவர் தம் நாற்காலியில் வந்து அமர்ந்து கண்ணாடியை மாற்றிக்கொண்டார். மேஜை மீது சீப் செக்ரடரி அனுப்பிய ஃபைல் இருந்தது. அதில் அவர் என்னைப் பற்றி எழுதி அனுப்பிய குறிப்பும் செருகப்பட்டிருந்தது. அதில் உடனடியாக, முதலமைச்சர் கீழிருக்கும் என்னை செக்ஷனுக்கு ரிலீவ் பண்ணி அனுப்ப வேண்டுமென்றும், எனக்கு அளிக்கப்பட வேண்டிய தண்டனை பற்றி அங்கே யோசிக்கப்படுமென்றும் சீப் செக்ரடரி எழுதியிருந்ததாகப் பின்னால் தெரியவந்தது.

ராஜாஜி அவர்கள் அந்தக் குறிப்பை நிதானமாக ஒரு தடவைக்கு இரு தடவை யாகப் படித்துப் பார்த்தார். பிறகு என்ன நினைத்துக் கொண்டாரோ? அதை இடது கைக்கு மாற்றிக் கசக்கிக் குப்பைக் கூடைக்குள் போட்டுவிட்டு, மேஜைமீதிருந்த ஃபைல்களில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். ஏன்? இன்றுவரை அந்த நிகழ்ச்சி பற்றி ஒன்றும் சொல்லவில்லையே!

பேட்டி : **கோமதிஸ்வாமிநாதன்**

## மூன்றாவது மாதத்திலிருந்து குழந்தையின் போஷாக்குத் தேவைகளை பால் மட்டுமே பூர்த்தி செய்யமுடியாது. எல்லா உறுப்பு-களும் வளமுற வளர்ந்திட, உங்கள் குழந்தைக்கு **பாரெக்ஸ்** தேவை. திட உணவுக்கு முதற் படி **பாரெக்ஸ்.**

மாதம் 1,2,3
மெல்ல கவிழ்ந்து
படுக்கும் கன்று



மாதம் 4,5,6
மெதுவாத் தவழ்ந்து
உதைக்கும் பாரு



மாதம் 7,8,9
நன்கு உட்காரும்
குழந்தை என்பது



மாதம் 10,11,12
நின்று சிரிக்கும்
அன்புடன் கண்டு



குழந்தைக்கு எவ்வளவு சீக்கிரம் திட உணவைத் தரத் தொடங்குகிறோமோ, அவ்வளவு நல்லது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

<u>உங்கள் குழந்தைக்கு பாரெக்ஸ் தரும் நலன்கள்:</u>

- புரதச் சத்து—குழந்தையின் மென்மையான ஜீரணத்திறனுக்கும், வேகமான வளர்ச்சிக்கும் சாலச் சிறந்தது.
- கார்போஹைடிரேட் (மாவுச் சத்து) துள்ளும் ஆற்றலுக்கு.
- கால்ஷியம், பாஸ்பரஸ், விடமின் D-2—வலிமை மிக்க எலும்புகள் மற்றும் பற்கள் பெற்றிட
- இரும்புச் சத்து—நல்ல ரத்த விருத்திக்கு.

**குதூகலமாகக் குழந்தை வளர்ந்திட**

**பாரெக்ஸ்-கிளாக்ஸோ தயாரிப்பு!**

நினைவிருக்கட்டும், பாரெக்ஸ் பால், பழச்சாறுகள், தேன், காய்கறிகள், முட்டை மற்றும் பெரியவர்களுக்கு உகந்த உணவுகளுடனும் நன்றாகக் கலந்து சுவையூட்டுகிறது!






பாரெக்ஸ் புத்தகத்தை <u>இலவசமாகப்</u> பெற, 20 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 202, பம்பாய்-1. என்னும் முகவரிக்கு எழுதுக (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்

CMGF-6-183TM



மணமகன் : ஆர். ராமன்
மணமகள் : செல்வி : பரிமளா
இவர்கள் திருமணம் சமீபத்தில் குடவாசலில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# காதல் முறுக்கு!

## ஜி.கே.பொன்னம்மாள்

"இந்தா, என் கணக்கிலே நீயும்தான் ஒன்னு துன்னு பாரேன்!" நிஜார் ஜேபியிலிருந்து இருபது பைசாவை எடுத்து நீட்டினான் கோவாலு. "ஊ...உம்... நான் ஒண்ணும் அரை வவுத்தோட வல்லே. உங்கையிலே வாங்கித் துன்ன. இந்தா பிடி, மீதி பத்து பைசா." — செல்லாயி பத்து பைசாவைக் கோவாலுவிடம் தூக்கிப் போட்டு விட்டு, வடை, முறுக்கு பரப்பி வைத்திருந்த கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள். "ரோஷக்காரப் பொம்பளே" என்று கோவாலு முணு முணுத்தான்.




"இந்தா அம்மா, முறுக்கு!" பெரியாள் வேலுதான் கூப்பிட்டான்.

"இந்தாய்யா, ஒரு முறுக்கு அஞ்சு பைசா. ஆமாம். சொல்லிப்புட்டேன். அப்பாலே வேலையைக் கொறைச்சுக் கேட்டுக்கிட்டு வியாபாரத்தைக் கெடுத்துப்புடாதே!" — கூடையைக் கீழே இறக்கி வைத்த செல்லாயியின் முந்தாணி நழுவியது.

"உனக்கின்னு புடிச்சுடுச்சு? வள்ளுன்னு எங்கிட்டே வுழுறியே!" என்று வேலு ஒரு முறுக்கை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

"இன்னாயிது? தவுலுண்டு இருக்கே! இதுக்கா அஞ்சு பைசா?"

செல்லாயியின் மூக்குச் சிவந்தது. "இன்னா ரோதனே. ஒங்கிட்டே எத்தனே தவா சொன்னாலும் உனக்கு மூளையிலே ஏறுது. இந்தா, பத்து பைசா கொடு. மூணு எடுத்துக்க. எனக்கு நஷ்டம் வந்தாப் பரவாயில்லே. என் பேரைச் சொல்லி நீயே துன்னு!"

வேலு மூன்று முறை திருப்பித் திருப்பி எண்ணியும் ஒன்பது பைசாதான் ஜேபியில் இருந்தது. "இந்தா, செல்லாயி. கோவிச்சுக் காதே. எங்கிட்டே ஒன்பது பைசாதான் இருக்கு. இன்னைக்கு முறுக்கு வேண்டாம்."

செல்லாயிக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லே. ஒன்பது பைசாவைப் பிடுங்கிக் கொண்டு மூன்று முறுக்கைக் கொடுத்து விட்டு நகர்ந்தாள். வாய்விட்டுச் சிரித்தான் மேஸ்திரி கோவாலு;

பாதை நீண்டு தெரிந்தது. ஒரு மருங்கில் பெரிய பெரிய பங்களாக்கள். மற்றொரு மருங்கில் தழைத்து வளர்ந்த ஆலமரங்கள். பகல் வெய்யிலை முழுக்க முழுக்கத் தன் தலையில் வாங்கியிருந்த மேஸ்திரி கோவாலு மரத்தடியில் சற்று அமர்ந்தான். இரண்டடி சென்றால் டீக் கடை. 'உஸ்' என்ற பெருமூச்சு. மத்தியான உணவோடு மூடிய அவன் வாய் வெற்றிலைக்குக் கூடத் திறந்திருக்கவில்லை. ஏனோ சப்பென்றிருந்தது அவனுக்கு. அவன் எப்படியும் அன்று பணத்தோடு வீட்டுக்குப் போனால்தான் அவன் தாய் அடுப்பை ஊதுவாள். அவன் தாய் கேட்பாள்: ''இன்னு நீ, வாங்கற துட்டை இன்னு செலவு பண்ணித் தொலைக்கிறே? ஆவி சோறு இல்லே ஊட்டிலே.....!''

அவனுக்கே தெரியாது. வீட்டுக்குப் போகும் போது எப்படி ஜேபி காலியாகிவிடுகிறது என்று. கண்டிராக்டர்கூடக் கேட்பார்: ''என்ன கோவாலு மேஸ்திரி! எல்லாருக்கும் சாயங்காலம் கூலின்னு உனக்கு மட்டும் காலையிலேயே குடுத்துவிடறேலே! மூணும் நாலும் பெத்தவங்ககூடச் சமாளிக்கிறாங்க. நீ ஒண்டிக் கட்டை. ஏன் இப்படிச் செலவு செய்யறே?'' என்று. 'ஒண்டிக் கட்டை. அந்தப் பேர் இன்னும் எத்தனை நாட்களுக்கு? அந்தச் செல்லாயியின் கழுத்தில் இரண்டு பவுன் செயினோடெ மஞ்சள் கயிறு ஒண்ணையும் ஏத்திட்டா....' கோவாலு தனக்குள் சிரித்துக் கொண்டான்.

பக்கத்தில் வாடிய சருகு இலைகளின் சலசலப்பு. கோவாலு திரும்பிப் பார்த்தான். கன்னமும் கதுப்புமாக இருந்த செல்லாயியின் முகம் சற்றே வாடியிருந்தது. அரையை இறுக்கிச் சுற்றியிருந்த சேலை சற்றே தளர்ந்திருந்தது. முன் நெற்றி மயிர் காற்றில் படபடத்தன. சோர்ந்திருந்த கண்களில் ஒரு மயக்கம். காலிக் கூடை. மடியில் துட்டு சேர்ந்திருக்கும். அவளது கட்டுக் குலையாத அழகைக் கோவாலு பல விநாடிகள் ரசித்ததைச் செல்லாயி சட்டை செய்யவில்லை. கோவாலுவின் கைகள் நிலவெடுத்தன. செல்லாயி சற்றுக் கோபக்காரி. இல்லாவிட்டால்....

எப்படியோ. கோவாலு வீட்டுக்குள் நுழைந்தபொழுது ஜேபி அனேகமாகக் காலிதான்.

''இன்னும்மே இன்னைக்கு இம்மா நேரம் லேட்டு?'' தலையிலிருந்த கலவை நிறைந்த 'பாண்டை'க் கீழே இறக்கி வைத்தான் பெரியான் வேலு. இரண்டு முறுக்கை எடுத்துக் காகிதத்தில் சுற்றி வேலுவிடம் நீட்டினாள் செல்லாயி.

இன்னிக்கு பேரம் சண்டையிலே முடியுமா என்று தூர இருந்து கவனித்துக் கொண்டிருந்தான் மேஸ்திரி கோவாலு. செல்லாயியின் மேல் வேலுவுக்கும் ஒரு கண் என்பது கோவாலுக்குத் தெரியும்.

''இன்னுவோ பொழுது ஆயிடுச்சு. இந்தா முறுக்கைப் புடி; எடு பத்துப் பைசா.'' பிரிமணையைச் சரி செய்து கொண்டாள் செல்லாயி.

''இன்னும்மே நீ ரொம்ப பேஜாராகிறே. மூணு முறுக்கு ஒன்பது பைசா. இல்லாங்காட்டி எம்பக்கம் வராதே'' — வேலு சிடுசிடுத்தான்.

செல்லாயிக்கு சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது. மேஸ்திரி கோவாலுவுக்கு மயிர்க்கூச்செறிந்தது.

''டேய் வேலு, கலவை கொண்டா. இன்னு பேசிக்கினிருக்கியே. கல்லு வேறே கொண்டாரல்லே. ஆமா, இன்னு நீ காலைலே நாஸ்தா பண்ணல்லே?'' — மேஸ்திரியின் குரலின் எதிரொலியாக வேலு 'பாண்டை'த் தூக்கிக் கொண்டு சாரத்தில் ஏறத் தொடங்கினான்.

செல்லாயி எடுத்த முறுக்கைக் கூடையில் போட்டுக் கூடையைத் தூக்கிக் கொண்டு நடந்தாள்.

மணி ஒன்று. ஆலமரத்தடியில் சித்தாள் கூட்டம்.

''என்னடி ராக்காயி, சோறு துன்னுப்புட்டு வெத்திலை போடாமே என்னமோ போலக் குந்திக்கினுகியே. — காய்ந்த வெற்றிலையில் கட்டிச் சுண்ணும்பை வைத்துச் சுருட்டிக் கடைவாயில் செருகிக்கொண்டே கேட்டாள் முனியம்மாள்.

''என் கம்மாட்டுத் துணியைக் காணோமேடி!'' — ராக்காயி கன்னத்தில் கை வைத்துக்கொண்டாள். ''யம்மோவ்! என்ன வெய்யிலு!'' கூடையைப் பொத்தென்று கீழே வைத்துவிட்டுச் செல்லாயியும் முட்டிபோட்டு அமர்ந்து கொண்டாள். கொஞ்ச நேரம் அரட்டை. ''என்னடி, அநியாயமாகீது. முறுக்கு ஒண்ணு கூட விக்காமே அப்படியே கூடை நெறைஞ்சிருக்கே. — கூடையை எட்டிப் பார்த்த பாப்பம்மா கேட்டாள். ''அதை ஏன் கேக்கறே போ. காலையிலே போணி சமயத்திலே அந்தப் பெரியாளு பேரம் பேசிக்கிட்டு வாங்காமப் போயிட்டாரு. இன்னிய வியாபாரமே போயிடுச்சு!'' — பெருமூச்சு விட்டாள் செல்லாயி.

''ஆமாண்டி. வயக்கமா ஒங்கிட்ட முறுக்கு வாங்கித் துண்ணுரே மேஸ்திரியாரு அவரு கூடவா இன்னிக்கு ஒங்கிட்ட வாங்கித் துண்ணலே?''

ராக்காயி கேட்டதை அடுத்து கொல்லென்று எழுந்த சிரிப்பு மேஸ்திரி கோவாலுவின் சத்தத்தைக் கேட்டுத்தான் அடங்கியது. செல்லாயிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. மேஸ்திரியைத் தொடர்ந்து எல்லாப் பெண்களும் எழுந்து சென்றார்கள். செல்லாயி சற்று நேரம் மௌனமாக அவர்கள் செல்வதையே பார்த்துக் கொண்டிருந்தாள். 'பேசாமல் பரிசம் போடச் சொல்ல வேண்டியதுதான்'—யாரோ ஒரு குறும்புக்காரி கூறியது செல்லாயிக்குத் தெளிவாகக் கேட்டது.

''செல்லாயி...!''

செல்லாயி திடுக்கிட்டுத் திரும்பினாள். ''இன்னைக்குக் காலையிலே சித்தாளுங்க என்ன பேசிக்கிட்டாங்க கேட்டியா?'' கோவாலு இன்னும் சற்று நெருங்கி அமர்ந்தான்.

கதிரவன் அணைத்துச் சென்றதன் அடையாளமாக வானம் வெட்கிச் செம்மை பூண்டிருந்தது. ''பேசேன், செல்லாயி!.....

# கால்கேட் மூலம், வாய்நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள் !

ஏனெனில்: ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல்க்ரீம் வாய் நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சத விகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும் உணவு உட்கொண்ட உடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. கால்கேட் மட்டுமே இந்த நிரூபணம் பெற்றது !

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்.




தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே... மற்றெந்தப் பற்பசையையும் விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.

இன்றே!
வாங்குங்கள்
ஸூபர் சைஸ்...அது
சிக்கனமானது!

DC.G.38 TAM

இப்போ இங்கே யாரு இருக்கிறாங்கன்னு தலையைக் குனிஞ்சுக்கிறே...'' கோவாலு வின் குரல் தழுதழுத்து ஒலித்தது.

''சித்தானுங்க வேறே என்னாத்தைப் பேசினுங்க? என் கலியாணத்தைப் பத்திப் பேசினுங்க. எனக்கு இன்னு சங்கடமாப் பூடிச்சு, தெரியுமா?'' — நிமிர்ந்த செல்லாயி யின் கண்கள் பனித்தன.

''இந்தா பாரு. அவங்க சொல்லுற மாதிரி சட்டுப் புட்டுன்னு செஞ்சுபுட வேண் டியதுதான். இன்னிக்கு ராத்திரி ஒங்கப்பாரு கிட்ட விஷயத்தைச் சொல்லிப்புடு. நானேப் பொறுத்து நானே வூட்டாண்டே வர்றேன்'' கோவாலுவின் பேச்சைக் கவனமாகக் கேட் டுக் கொண்டிருந்தாள் செல்லாயி.

''ஆமா, இன்னிக்கென்னு வியாபாரமே ஆகலியா? அந்த வேலுப் பய போணி பண்ணவுமே நான் நெனச்சுட்டேன். காலணு செலவு பண்ண மாட்டான். ஒரு காசுன்னு மனுசன் செத்துடுவான். சரி. இந்தா. ஒரு முறுக்கு எடு'' சுவாதீனமாகக் கூடையி லிருந்து ஒரு முறுக்கை எடுத்துச் சுவைத்தான் கோவாலு. ''இந்தாம்மே. துட்டு குடுக்க மறந்திட மாட்டேன். கலியாணம் ஆவுற மட்டும் எல்லாம் கணக்கோட இருக்கும்'' கோபாலு இருபது பைசாவைக் கூடையில் போட்டான்.

**கா**லை மணி பதினொன்று. கட்டட வேலை ஜரூராகிக் கொண்டிருந்தது. ராக்காயியும் பாப்பம்மாவும் மூச்சுப் பிடிக்க அப்படியும் இப்படியுமாகக் கல்லையும் கலவையையும் சுமந்து சென்று கொண்டிருந்தார்கள். மேஸ்திரி கோவாலுவுக்கு 'கொல்று' நிறைய சிமிட்டியை ஏனோ அன்று தூக்க முடிய வில்லை? மனச் சுமைதான் அதற்குக் கார ணமோ? அடுக்கி வைத்த செங்கற்கள் கோணல் கோணலாக இருந்தன. ஒரே எரிச்சலாக இருந்தது அவனுக்கு.

''டாய் மடையா. வேலு! மட்டப் பலகை எங்கே வச்சிக்கிறே?''

அவனுக்கு ராக்காயிதான் பதில் சொன் னாள்: ''அவரு இன்னிக்குக் காலையிலிருந்தே வரலிங்க!''

''வரலியா?'' — கோவாலு குழம்பினான்.

ஆலமரத்தடிக்குப் பக்கத்திலே வந்தபோது அந்த உருவம் நடையைச் சற்றுத் தளர்த்திச் செவியைக் கூர்மையாக்கிக் கொண்டது. பாப்பம்மாவின் குரல் கனத்தது. ''இன்னு பொண்ணுடி அவ! நேத்துக் கூட இந்த வெசயத்தைப் பத்தி மூச்சு விடலியே!''

''சொல்லிப்புட்டா நாம்ப அங்கிட்டுப் போயி சோத்துக்கு நிக்கவா போறோம்? என்னுவோ யாரும் பார்க்காத மாதிரி பரிசம் போடறு.''

அந்த உருவம் எச்சிலை விழுங்கியது. ''நம்ப மேஸ்திரி அய்யாதான் செல்லாயியைக் கல்யாணம் கட்டிக்கப் போறாரு என்று இருந் தோம். பாப்பம்மாவின் குரலில் ஏமாற்றம் தொனித்தது. அந்த உருவம் இந்தப் பேச் சைக் கேட்டுப் பிரமித்துப்போய் நின்றது.

''நான் செல்லாயி கிட்டே கேட்டேனே: 'எம்புள்ளே! ராஜாவாட்டம் துட்டு குடுத்து



## சொல்லாட்சி

ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதமராக இருந்த போது சட்டசபையில் அவரது சொல்லாட்சி அனைவரையும் மகிழ் விக்கும். இதோ ஒரு நிகழ்ச்சி :

எதிர்க்கட்சி அங்கத் தினர் : ''பிரதமர் தமது தவறை ஒப்புக் கொள்வது பற்றிக் குழப்பத்தில் இருக் கிறார் போலிருக் கிறது!'' **(confusion about a confession).**

உடனே ராஜாஜி, ''நண்பர் தமக்குள்ள குழப் பத்தை ஒப்புக் கொண்டு விட்டார்!'' **(confession of a confusion)** என்றதும் சிரிப்பலை ஓய வெகு நேரம் பிடித்தது. - ஒரு நூலிலிருந்து ''மணி''

---

முறுக்கு வாங்கித் திம்பானே, கைராசிக்கார கோவாலு. அவனை வுட்டுப்புட்டு அந்தக் கருமி வேலுவைப் போய்க் கண்ணாலம் கட்டிக்கு றியே. அவன் ஒரு நாளைக்கின்னு ஒரு டீத் தண்ணிக்காவது துட்டுக் குடுத்திருக்கிறானு?' அப்படின்னு.''

செல்லாயி என்ன பதில் கொடுத்திருப் பாளோ என்று அறிய ஆவல் கொண்டது அந்த உருவம்.

ராக்காயி பேச்சை நிறுத்திவிட்டு சுருக்குப் பையைத் திறந்தாள். ''அட, சொல்லிப்புட்டு வெத்திலை போடும்மே.''

''இன்னு நீ பாதிலே வுட்டுப்புட்டு....?''

ராக்காயி எல்லோருடைய வெறுப்பையும் கொட்டிக் கொண்டாள். அவள் தொண் டையைச் சனைத்துக் கொண்டு பேச ஆரம் பித்தாள். ''அது இன்னு சொல்லிச்சு, தெரி யுமா?'' நீட்டி முழக்கினாள் ராக்காயி.

''செல்லாயி சொல்லிச்சு.... 'முறுக்கு வியாபாரம் ஆகணுமின்னு ராசிக்கார ஆளு போணி பண்ணுேனும். அப்போதான் தினம் தினம் வியாபாரம் நல்லா நடக்கும்.....'' மறைந்திருந்த உருவம் தலையைத் தாழ்த்திப் பேச்சை உன்னிப்பாகக் கவனித்தது.

''...'போணி பண்ண ராசிக்கார மேஸ்திரி தான் ஆளு. ஆனு பொண்ணுங்களோட கலியாணம் என்கிற வியாபாரம் ஒரு நாள் தான். இன்னிய பரிசத்தோட என் வியா பாரம் முடியணும். என் முறுக்கு வியா பாரம் நடக்கணும்னு மேஸ்திரி ஐயா மாதிரி துட்டைத் தாராளமா செலவு பண்ணுறவங்க தான் வேணும். ஆனு நம்பளைப்போல பொண்ணுங்க குடும்பம் நல்லா நடக்கணும்னு வேலு அத்தான் மாதிரி சிக்கனமா இருக்க றவங்கதான் வேணும் என்று சொல்லிச்சு!'' ராக்காயி பேச்சை முடித்தாள்.

ராக்காயி பேசிய பேச்சுக்கள் சம்மட்டியா, வார்த்தைகளா? அந்தஉருவம் நிமிர்ந்தபோது மேல் இலை ஒன்று அதன் தலையைப் பதம் பார்த்தது. 'கொல்று' பிடித்த கையுடன் அந்த உருவம் மரத்தின் பின்னாலிருந்து புதுக் கட்டிடத்தை நோக்கிச் சென்றதைச் சித்தாள் பெண்கள் கவனிக்கத் தவறவில்லை.

# “இழப்பின் எல்லையில்..” வ. வெ. சுப்பிரமணியன்



உணர்வின் மெல்லிய இழைகளாய்ப் பூத்த நினைவுகளின் மயக்கத்திலிருந்து அவளால் விடுபட இயலவில்லை. எத்தனை எத்தனை இரவுகள் அவள் இந்தச் சிந்தனையின் முடிவாக உறக்கம் கொள்ளாது படுக்கையில் உருண்டு கொண்டிருக்கிறாள். எத்தனை எத்தனை இரவுகள் அவள் தன் தலையணையைக் கண்ணீரால் நனைத்திருக்கிறாள். ஆறுதலாக முதுகில் படியும் அவன் விரல்கள் ஓரளவு அமைதியைக் கொடுத்தாலும், நிதர்சனமான உண்மையின் தீவிரம் அவளை மறுபடியும் அதே சிந்தனையுள் ஆழ்த்திவிடும். பல முறைகள் தன் குறையினை நிவர்த்தி செய்யக்கூடிய தேவையினைப் பற்றி அவள் எண்ணி எண்ணி மறுகினாலும், கேள்வியாகவே அவள் மனத்தில் நிறைந்து விட்ட அதற்கான பதில் அவளுக்குக் கிடைக்கவேயில்லை.

அவள் கட்டிலில் எழுந்து உட்கார்ந்து கொண்டு திரும்பிப் பார்த்தாள். கவலையற்றுத் தூங்கும் அவன் முகம் தெரிந்தது. தன்னை இந்த நடுநிசியில் எழுப்பி அமர்த்தியிருக்கும் சிந்தனையின் கடுமை அவனுக்கு மட்டும் எவ்வாறு இல்லாது போயிற்று. அவனுக்கும் இதில் பங்கு உண்டுதானே! நினைவுகளின் பாரத்தைப் பெருமூச்சால் குறைக்க இயலுமோ ?

அந்த வீட்டில் அவளையும் அவனையும் தவிர வேறு யாரும் கிடையாது. வீட்டு வேலைகளைக் கவனிக்கக் காலையிலும் மாலையிலும் மட்டுமே வேலைக்காரக் கிழவி ஒருத்தி வருவாள். அவன் சாப்பிட்டுவிட்டு வேலைக்குச் சென்று விட்டால் பிறகு அவளுக்குத் தனிமைதான் துணை. ஏற்கனவே மென்மையான உணர்வுகளைக் கொண்டுள்ள அவள் உள்ளம், மழலையற்ற வெறுமையின் கொடுமையைத் தனிமையில் அதிகமாக உணர்ந்து நொந்தது. ஐந்து பெண்களுக்கு நடுவே பிறந்த அவளைத் திருமணம் செய்து கொடுத்த பின்பு சொந்தமே அறுந்து விட்டாற் போன்று எண்ணி விட்டார் அவள் தந்தை. அவருக்கு எத்தனையோ கவலைகள். அவள்கூடச் சில சமயம் எண்ணிப் பார்த்திருக்கிறாள். தன் தாயைப் போன்று தனக்கும் வசவச வென்று குழந்தைகள் பிறந்து விட்டால், தான் குடும்பம் நடத்துவது ஒரு பள்ளிக்கூடம் போன்று இருக்கும் என்று நினைக்கையில் அவளுக்குச் சிரிப்பு வரும். அதெல்லாம் இளம் பருவச் சிந்தனைகள். முதிராத இளம் பருவச் சிந்தனைகள் எல்லாம் எத்தனை வேடிக்கையாக அமைந்ததென்பது உண்மை வாழ்வில் அடியெடுத்து வைத்த பிறகல்லவா புரிகின்றது! அதிகமான குழந்தைகள் பிறப்பதை எண்ணிச் சிரித்த அவள் குழந்தையே பிறவாத அவல நிலை தனக்கு வருமென்று அறிந்திருந்தால் அன்றே அழுதிருப்பாளோ ? அல்லது ஆண்டவன் படைப்பினைக் கேலி செய்த அவளுக்கு இது இறைவன் அளித்த பரிசோ ?

“சுதா, இன்னுமா பூஜை முடியவில்லை? ஆபீசுக்கு நேரமாவது தெரியவில்லையா ?” அவன் இரைவது காதில் விழுகிறது. உள்ளத்தில் தெம்பில்லை என்றால் உடலில் எங்கிருந்து தெம்பு வரும்? அவள் சோர்வாக அமர்ந்து விடுகின்றாள். ஒவ்வொரு நாளும் பூஜையில் தான் அவள் அதிக நேரம் செலவிடுகின்றாள். உணர்ச்சிகளையே பூக்களாகத் தொடுக்கின்ற வித்தை சென்ற சில மாதங்களாக

அவனுக்குக் கைவந்த கலையாகி விட்டது. சில நாட்கள் சுற்றுப்புறத்தையே மறந்து அவள் இவ்வாறு பல மணி நேரங்கள் அமர்ந்து விடுவாள். பூஜையறையில் வைத்துள்ள கிருஷ்ண விக்கிரகத்திடம் அவள் கெஞ்சும் குரலில் கொஞ்சுவாள். ''கண்ணா, நீயே எனக்குக் குழந்தையாகி விடேன்'' என்று வேண்டி நிற்கும் அவள், குழந்தைக் கண்ணனின் சிறிய விரல்கள் மென்மையாகத் தன்னைத் தீண்டும் இன்ப நினைவில் அமர முயல்வாள்.

''இறைவா, என்னை மலடியாக்கிவிடாதே'' என்று கூறியோடு இளமையும் மையமாக இப்பிரார்த்தனை அவள் உள்ளத்தோடு ஒட்டி விடுகின்றது.

நினைவுகள் பச்சைக் கொடி போன்று பசுமையாக நெஞ்சில் இழைந்தன. முதலில் படியும் மாலை வெய்யில் அளிக்கும் இதமான சூடு அவள் உள்ளக் கிளர்ச்சியைக் கிண்டி விடுகின்றது. அவள் மார்பு விம்மித் தணிந்தது. அன்றுதான் அவளுக்குத் திருமணம். ஓலைப் பந்தலும், குலை தள்ளிய வாழை மரங்களும் மாவிலைத் தோரணங்களும் அவள் மண வாழ்வின் ஆரம்பத்துக்குக் கட்டியம் கூறிக் கொண்டிருந்தன. உற்றார் உறவினர்களின் களிப்புமிக்க பார்வையின் ஸ்பரிசம். கண் நிறைந்த கணவர், கை நிறைந்த சம்பளம் என்ற வாழ்த்துக்களோடு மஞ்சள் சரட்டின் அசைவில் சிலிர்க்கும் நெஞ்சத்தோடு அவள் தலை குனிந்து அமர்ந்திருந்தாள். அவ்வளவு ஆரவாரத்திலும் தன் நெஞ்சம் தனிமைப் பாலத்தால் தனக்கு மாலையிட்டவரின் நெஞ்சோடு இணைவதை உணர்ந்த அவள் பெருமிதம் அடைந்தாள்.

இல்வாழ்க்கையின் தொடக்கத்தில் அவர்கள் இருவரும் சந்தித்தபோது அவன் கேட்டான் :

''குடும்பக் கட்டுப்பாடு பற்றி உன் அபிப்பிராயம் என்ன சுதா?''

''ம்... அதைப் பற்றி இப்போது தான் பேசுவதா ?''

''பின்னே இப்போ இல்லாம எப்போ பேசறதாம்? ஆறு குழந்தைகள் பிறந்த பின்னுடியா ?''

நாணத்தால் தலை குனிந்த அவளை அவன் சட்டென்று அணைத்துக் கொண்டான். பிறகு சொன்னான்:

''அதில்லே சுதா. எனக்குக் குழந்தைகள் என்றால் மிகவும் பிரியம். அவர்களைச் சுமையின்னே நான் சொல்ல மாட்டேன். எவ்வளவு பிறந்தாலும் எனக்குத் திருப்திதான். நீ என்ன சொல்றே ?''

''அளவோடு இருந்தா நல்லதுன்னு நான் நினைக்கிறேன்.....'' என்றாள் அவள்.

ஆனால் அவர்களுடைய அந்த ஆசை நிறைவேறவேயில்லை. அப்பப்பா.... காலம்தான் எவ்வளவு வேகமாக ஓடிவிடுகின்றது. எட்டு வருடங்கள் பூவிதழ்களாக உருண்டு விட்டன. வருடங்கள் செல்லச் செல்ல, முதுமையடைகின்ற உடலில் எவ்வளவுதான் இளமை உள்ளத்தைப் புகுத்திக் கொண்டாலும், அவர்கள் வாழ்வில் மகிழ்ச்சியைக் காண இயலவில்லை. அவர்களுடைய நிறைவேறாத ஆசை கானல் நீராக நீண்டு கொண்டு வந்தது. அவளைப் போன்று அவன் இந்தக் குறையை வெளிக் காட்டிக் கொள்ள மாட்டான். கையால் நீரில் அடித்தால் பரந்து விரியும் நீர்த் துளிகளாக அவன் படபடப்புக் காட்டும்போது, அவன் உள்ளமிழந்த நீரின் தன்மையில் அசையாது இருக்க எப்படித் தான் கற்றுக் கொண்டானோ?

அவன் எப்போதும் போல உற்சாகமாகவே இருப்பான். காலையில் அவசர அவசரமாகச் சாப்பிடுவது முதல் மாலை வேளைகளில் மெது

## கல்கிக்கு ஒரு கட்டுரை

**12-1-69 கல்கி வள்ளுவர் மலருக்கு ராஜாஜி எழுதிய கட்டுரையின் கையெழுத்துப் பிரதி:**

[illegible]

(தொடர்ச்சி 75ம் பக்கம் பார்க்க)




## பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற் சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப் பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற் கேற்ற முறையில் செய்யப் பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்கு கிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்ப தில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடைய வர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

வாக நண்பர்களுடன் அரட்டை அடித்துக் கொண்டு, சுற்றிவிட்டு இரவு சாப்பாட்டுக்கு வரும் வரை அவனுடைய போக்கில் மாறுதலே இல்லை. அச்சில் நிறுத்திச் சுழற்றி விடப்பட்ட சக்கரம் போலச் சுழன்று சுழன்று ஒரே இயக்கத்தில் ஒன்றிவிடும் அவன் தன்மை அவளுக்கு ஆச்சரியத்தையே தரும். 'இது எவ்வாறு சாத்தியம் ?' என்று அவள் எண்ணுவாள்.

சில சமயம் அவள் உள்ளத்தின் ஏக்கம் கண்களில் வெறியாக மாறிவிடும் நிலையில் அவன் அவளுடைய ஆசையை நிறைவேற்றி வைக்க முடியாத இழப்பில் குமுறுவது அவளுக்குத் தெரியும்.

அவர்கள் எங்கெல்லாமோ சுற்றினார்கள். காசி, இராமேசுவரம் என்று அவர்கள் கால் படாத புண்ணியத் தலங்களே இந்தியாவில் இல்லையென்று கூறும்படி சுற்றினார்கள். வைத்தியர்கள், உடற்கூறு சாத்திரப்படி அவர்களுக்குக் குழந்தை பிறவாதிருக்கக் காரணம் ஒன்றுமில்லை என்று கூறிவிட்ட பிறகு, வைத்தியர்களுக்கெல்லாம் வைத்தியரான அந்த வைத்தியநாதரைப் பணியாது காரியம் நடக்குமா ?

''இறைவா, என்னை மலடியாக் காதே!'' என்ற குரல் தன் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டே இருக்கின்ற நிலையில், அவள் தான் ஒரு மலடி என்பதை உண்மைக்குச் சிறிது அதிகமாகவே உணர்ந்தாள். இப்பொழுதெல்லாம் அவள் பூஜை யறையை விட்டு வெளியே வருவதே யில்லை. அவள் நிலையை — அந்தப் பரிதாபமான ஏக்கத்தை - அவன் உணர உணரத் தன்னுடைய ஏக்கத்தைக் குறைத்துக் கொண்டு அவளுக்கு ஆறுதல் கூற முயன்றான். என்ன செய்தும் அவள் ஏக்கத்தை மாற்ற இயலவில்லை. அந்த ஏக்கமே ஒரு தவமாகக் கோலம் செய்து கொண்டாற் போல் அவள் இறைவன் முன் அமர்ந்து கொண்டு தன் மலட்டுத்தன்மை நீங்க வேண்டினாள்.

திங்கள் பல சென்றன. வசந்தம் வந்தது. இயற்கையன்னை பூமியென்னும் பெட்டகத்திலிருந்து அளவில்லாத அழகு நகை பூண்டு தன்னை அழகு செய்து கொண்டாள். அவள் சிரிப்பில் புதுப் பூக்களின் மென்மையான மணம் எங்கும் பரவியது. நாளுக்கு நாள் இளைத்து வரும் தன் மனைவியைக் கண்டு அவனால் பெருமூச்சு விடத்தான் முடிந்தது.

அன்று அவள் திடீரென்று வாந்தி எடுத்தாள். முதலில் பித்தமோ என்று நினைத்தாள். பிறகுதான் அது, தான் பித்தாகிப் போனதற்குக் காரணமான உயிர்ப் பொருளின் தோற்றம் என்பதை உணர்ந்தாள். உள்ளக் கருவில் வளர்ந்த ஆசை உயிர்க் கருவாகப் பரிணமித்திருக்கின்றது என்பதை அவனிடம் தெரிவித்தபோது எத்தனை மகிழ்ந்தான். பிறக்கப் போகும் இளங்குருத்து பற்றி அவனிடம் பேசும்போதெல்லாம் அவன் மிகவும் பெருமையுற்றான். நாள் தோறும் தான் செய்த பூஜைக்குக் கிடைத்த பலனில் அவள் உள்ளம் கர்வம் கொண்டது. ''மலடென்ற மாகுறை தீர்க்க வந்த மாணிக்கமே!'' என்று இதழ்கள் இன்ப வயிப்பில் முணு முணுக்கும் களிப்பில் அவள் நெற்றியில் துளிர்த்த வியர்வைத் துளிகளெல்லாம் மகிழ்ச்சித் தாண்டவம் ஆடின.

மாலையில் அவன் இப்பொழுதெல்லாம் சீக்கிரமாகவே வீட்டுக்கு வந்து விடுகின்றான். மல்லிகைப் பூவை அவள் கைகளில் கொடுக்கும் போது, அவன் மென்மையாக அவள் கைகளைப் பற்றுவான். அவர்களின் நெடு நாளைய அவா, நிறைவேறும் காலம் நெருங்கி வருகின்றது என்று அறிகின்ற உணர்வில் அவள் கைகள் பெருமையோடு அவன் கைகளுள் புதையும். சில வேளைகளில் அவர்கள் இருவருமாகச் சேர்ந்து உலாவச் செல்வார்கள். மங்கிய மாலையின் சுகமான காற்றில், பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றிய இனிய நினைவுகளில் மூழ்கி இருப்பார்கள். சட்டென்று அவனுக்கு விழிப்பு

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

வரும். '''என்ன சுதா இது ? இப்படித்தான் ஊதல் காற்றில் உட்கார்ந்திருக்கிறதா ? உடம்பு என்னவாகும்? வா வா, வீட்டுக்குப் போகலாம்'' என்ற பரிவான மொழி கூறி, அவள் அடையப் போகும் தாய்மையையே அணைக்கின்ற ஆர்வத்தில் அவன் கைகள் இதமாக அவள் முதுகில் படியும்.

'வெறும் உயிர்ப் பொருளைச் சுமக்கின்ற தன்மை இன்றித் தன் ஆசையையே சுமக்கின்ற மகிழ்வில் அவள் உடல் பெருத்தாள். உள்ளத்து ஆசை உதிரத்தில் சேர்ந்துவிட்ட பெருமையின் மெருகு அவள் உடலெங்கும் பூத்தது.

பின்னிரவுக் காலங்களில் சில சமயம் வலி அதிகமாகும். வயிற்றிலுள்ள இரத்த நாளங்களையெல்லாம் பந்தாகச் சுருட்டி உள்ளிருக்கும் மதலை விளையாடுவது போல், வயிற்றில் வலி உண்டாகும். அதுவும் அவளுக்கு இன்பமாகவே பட்டது. அவள் வலியால் முனு முனுக்கும் போது அவன் ஆறுதலாகக் கிசுகிசுப்பது காது மடல்களின் அருகே மெல்லிய காற்றாக இழையும். ''துணைக்கு ஆளில்லையே, என்ன செய்வது ?'' என்று அவன் கேட்கும் போது, 'பரவாயில்லை' என்று சிரித்துக் கொண்டே கூறி விடுவாள். தன் பெருமையைத் தானே அநுபவிக்கும் தன்மையில் அவள் தனித்து நின்று விடுவாள். பலமுறை அவன் கேட்கும் கேள்விகளுக்குப் பதிலிறுக்க மாட்டாள். நினைவிலேயே இலயித்துவிட்ட மௌனம்தான் அவனுக்குப் பதிலாகக் கிடைக்கும்.

அன்று நடுப் பகல் வலி மிகவும் அதிகமாகி விட்டது. அவனுக்குப் 'போன்' செய்து பார்த்த போது அவன் ஆபீஸில் இல்லை. தலைமைக் காரியாலயத்துக்கு ஏதோ அவசரமாகச் சென்று விட்டானாம். உதட்டைக் கடித்துக் கொண்டாலும், வலி நிற்பதாகத் தெரியவில்லை. வேலைக்காரத் தாயியை அழைத்து, ஒரு டாக்ஸியைக் கூப்பிட்டுக் கொண்டு வரச் சொன்னாள். விஷயத்தை அறிந்து கொண்ட தாயி டாக்ஸியுடன் பக்கத்து வீட்டு அம்மாளையும் அழைத்து வந்தாள். டாக்ஸியில் ஏறி உட்கார்ந்த உடனேயே மயக்கம் வரும் போலிருந்தது. வலியென்ற ஒன்றைத் தவிர மற்றவையெல்லாம் சூன்யமாகிவிட்ட நிலை. ஆஸ்பத்திரிக்கு வந்ததுகூட அவளுக்கு நினைவில்லை.

இமைகள் இரண்டிலும் யாரோ பாறையைத் தூக்கி வைத்தாற் போலிருந்தது. கஷ்டப்பட்டுத் திறக்கப்பட்ட இமைகள், கண்களின் கருக்கத்தில் புதைந்தன. மூக்கு வழியாகப் புதைந்து உடலெல்லாம் நிறைந்து விட்டாற் போன்ற மருந்து நெடி. தான் ஆஸ்பத்திரியில் இருப்பதை அவள் உணர்ந்தாள். டக்டக்கென்று நர்ஸுகள் நடக்கும் ஒலி அதனை உறுதிப் படுத்தியது.

பக்கவாட்டில் திரும்பியதால் மெத்தென்ற தலையணையில் கன்னங்கள் படிந்து அழுந்தின. மெதுவாகச் சமாளித்துக் கொண்டு எழுந்து பார்த்தாள். அருகே துணியால் போர்த்தப்பட்ட சிறு மதலை. கிணற்றில் போட்ட கல் சட்டென்று உள்ளே அமிழ்வது போல், நினைவுகளின் பாரம் வெளித் தங்க இயலாமல் நெஞ்சில் அமிழ்ந்தது. இதோ தன் உதிரத்தோடு உதிரமாய்க் கிடக்கும் இவனுக்காக அவள் எத்தனை வருடங்கள் தவமிருந்திருக்கிறாள். இது இவனு...இவளா... குனிந்து அக்குழந்தையை எடுத்தணைத்தாள். உள்ளே ஓடிவந்த நர்ஸ் தயங்கி நிற்பது தெரிந்தது. குழந்தையை உச்சி முகர்ந்த அவள், சட்டென்று வெளிறிய முகத்துடன் வீறிட்டாள். போர்த்தப் பட்டிருந்த துணிக்குள் உயிரில்லாச் சதைப் பிண்டம்தான் இருந்தது.

உடல் வலியைப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் உள்ள வலியைத் தீர்க்க ஏது மருந்து? ஏக்கங்களும், துன்ப நினைவுகளும் கரையும் மட்டும் அவள் அழுதாள்.

கண்ணீர் கன்னத்தில் விழுந்து உறைந்து போனதால் கண்களைச் சரியாக அசைக்க இயலவில்லை. இமைக்குள் மூடிப் பொதிந்திருந்த

ஆசைப் பெட்டகங்களின் தெறல்கள் அவன் கண் திறந்தபோது வெளிப் பட்டன. அவன் புரிந்து கொண்டு தான் நின்றிருந்தான். எட்டு வருஷங்கள் கழிந்த பின்பு வரமளித்தாற் போல் பிறந்த ஒரு குழவி அரை மணி நேரம் கூடத் தங்கவில்லையே... ஓ! அவன் இலட்சியங்கள்தான் எப்படி உடைக்கப்பட்டு விட்டன!

''என்னங்க குழந்தை செத்துப் போய்ப் பிறந்துச்சா... இல்லே, பிறந்ததுக்கு அப்புறம் செத்துதா'' ஏதோ ஒரு புனிதமான மந்திர உச்சாடனம் போல் வினவப்பட்ட அக் கேள்விக்கு அவன் தொங்கிய குரலில், ''சுதா, அது பிறந்தபோது உயிரோடுதான் இருந்தது. ஆனா அரை மணியிலே மூச்சு விட முடியாமல் இறந்து விட்டது'' என்று பதிலளித்துவிட்டு, இந்த நிலையில் இவள் தன்னைக் கேட்கும் இக் கேள்வியின் பொருள் என்னவென்று அறியாது அவளைப் பார்த்தான். தேய்ந்த வெண்கலப் பாத்திரமாகச் சட்டென்று அவள் முகத்தில் ஓர் ஒளி பரவியது. அவள் சொன்னாள்:

''அத்தான், நான் இனிமே மலடியில்லே. ஒரு கொழந்தை பொறந்து அரை மணி நேரம் இருந்தா என்ன அல்லது அறுபது வருடங்கள் இருந்தா என்ன?... நான் ஒரு தாயாகி விட்டேன். அரை மணி நேரத்திற்கேனும் நான் ஒரு தாயாக இருந்திருக்கேன். இப்போதுங்கூட, இறந்து விட்ட அந்தக் குழந்தைக்குத் தாயிங்கற முறையிலே நான் என் மலட்டுத் தன்மையை நீக்கிவிட்டேன். நான் வேண்டிக் கிட்டமாதிரிதான் கடவுள் எனக்குக் கொடுத்தாரு... கடவுளே என்னை மலடியாக்காதேன்னேன்... அவர் என்னைத் தாயாக ஆக்கி விட்டார். ஆனக் குழந்தையைத்தான் தக்கவிடலே!''

இறைவனுடைய பெருங்கணக்கின் கூட்டல் கழித்தல்களை எல்லாம் தெரிந்து கொண்டு விட்ட தத்துவமாய் இவ்வார்த்தைகள் அவள் வாயினின்று மடிந்து விழுந்தன.

பிறகு திடீரென்று வெளிப்பட்ட உறுதியுடன் அவள் சொன்னாள். ''எட்டு வருடங்கள் புனிதமான பூனிதழ்களாக நெஞ்சில் பொதிந்து வைத்த ஆசை இப்படி உடைந்ததை நான் விரும்பவில்லைதான். நம்பிக்கை இழக்காத நிலையில் நான் அவற்றை வளர்க்கவே செய்யறேன்'' அவள் மௌனமாகி விட்டாள்.

இழப்பின் எல்லையில் அவளுக்கேற்பட்ட இந்த உறுதி கலந்த நம்பிக்கையை அவன் எண்ணிப் பார்த்தான். கண்கள் சிவந்து கண்ணீர் வரும்போலிருந்தது. கண்ணீரைக் கைக்குட்டையால் மறைத்துக் கொண்டு அவன் வெளியே சென்றான்.



# எங்கள் ராஜாஜீ

கவியோகி சுத்தானந்த பாரதியார்

சாந்த மளிக்கும் காந்தி யுகத்தின்
சங்கோலி ராஜாஜீ
தீந்தமி ழீன்ற தீர்க்கதரிசி
திவ்விய ராஜாஜீ

ஓட்டைவாங்கி நாட்டைக் கருதார்
உதவாக் கரையாட்சி
ஓட்டைக்கப்பல் ஓடா தெனவே
ஓதிய ராஜாஜீ

கத்தியில்லாதே சத்திய காந்தி
கண்ட சுதந்திரத்தைச்
சக்தியில்லாதார் தளர விடுத்ததைத்
தாங்கும் ராஜாஜீ

வரங்கிடந்தடைந்த சுதந்தரச் செல்வம்
வாடி வருந்திடவே
குரங்குகைமாலை யானது கண்டே
குமுறும் ராஜாஜீ

சிக்கலறுக்கும் பக்குவ ஞானஞ்
செறிந்த ராஜாஜீ
மக்கள்படுந் துயருக்கொரு மருந்து
மதிமிகு ராஜாஜீ

*தொண்ணூற்றொன்றிற் பத்தொன்ப [தாண்டுச்
சுறுசுறுப்புட னுழைத்தே
கண்ணுங் கருத்துமாகச்சுதந்திரங்
காக்கும் ராஜாஜீ

இன்றவர்சொல்வது நாளை நடக்கும்;
இசைபெறு ராஜாஜீ
வென்றவர்வாழ்க சுதந்தர முரசம்
விறுக விறுகவே!

* 91ஐத் திருப்பிப் போட்டால் 19.

# வட்டமேஜை

சென்ற நவம்பர் 2ந்தேதி மாலை சுமார் ஆறரை மணிக்கு பெங்களூர் சிட்டி ரயில்வே ஸ்டேஷனின் உட்புறத்திலிருந்து வெளிப்புறத் துக்குச் சுரங்கப் பாதை வழியாக வந்து கொண்டிருக்கையில் மின்சாரக் கோளாறு ஏற்பட்டு விளக்குகள் அணைந்து விட்டன. அப்போதுதான் ஐலண்டு எக்ஸ்பிரஸில் தங்கள் உறவினர்களை, நண்பர்களை ஏற்றி விட்டுத் திரும்பும் மக்கள் கூட்டமும் இந்த இருளில் அகப்பட்டுக் கொண்டு விட்டது. அருகில் வருபவர் பெண் என்பதை அறிந்து கொண்டவுடன் அநாகரிகமாக நடந்து கொள்ளத் தலைப்பட்டனர் ஒருசிலர். கும்ப லில் அகப்பட்டுக் கொண்ட பெண்கள் பாடு திண்டாட்டமாகி விட்டது. இம்மாதிரிச் சந்தர்ப்பங்கள் திருட்டுக்கும் வழி வகுப்பதாக இருக்கிறது.

இது போன்ற இடங்களில் மின் விளக்குகள் அணைந்தவுடன், பாட்டரியின் சக்தியால் இயங்கும் விளக்குகள் எரிவதற் கான ஏற்பாடு செய்ய வேண்டும்.

பெங்களூர் — 1<br>
14–11–69 குமாரி சியாமளா பத்மநாபன்

★

கல்கி 23–11–69 இதழில் நான் எடுத்த வண்ணப் படம் மேலட்டையில் இடம் பெற்றிருந்தது. ஆனால் தாயும் மகளும் தோற்றமளிக்கும் இந்தப் படத்தை எடுத்தது நான் என்பது குறிப்பிடப்படவில்லையே?

திருச்சி—2<br>
20–11–69 ஆர்.பி.எஸ். மணி

(இதோ ஒரு தாத்துக்கு இரண்டு தரமாக ஆர். பி. எஸ். மணி என்ற பெயரைப் பிரசுரித்துவிட்டோம்.

— ஆசிரியர்.)

★

★ மனிதன் சந்திரனைத் தனக்குரியதாக ஆக் கிக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டுள்ளான். விஞ்ஞான யுகம் இது. இத்தகைய சந்தர்ப் பத்தில் இங்கு நாம் காண்பதென்ன? விஞ் ஞானக் கல்வித் தரம் முன்னேறுவதற்குப் பதில் தேக்க நிலையில் உள்ளது. கல்லூரி மாணவன் இன்றையத் தேவைக்கேற்ற கல்வி யைக் கற்கின்றானா என்பது சந்தேகமே. எத்தனை பி. எஸ்.ஸி. இரசாயன மாண வர்கள் ஒரு பி. எச். மீட்டரையோ அல்லது ஒரு குரோமோட்டோகிராபி செய்முறைக் கருவியையோ கண்டிருக்கின்றார்கள்? இன் றைய இரசாயனச் சோதனைகள், ஆராய்ச்சிகள் முழுக்க முழுக்க மின்சாரத்தால் இயங்கப் பெறும் கருவிகளின் உதவி கொண்டே நடை பெறுகின்றன. ஆகவே நவீன தொழிற்சாலை களுக்கும் மாணவர் கற்கும் கல்விக்கும் தொடர்பு இருப்பது மிகவும் அவசியம்.

நம்முடைய பொதுமக்களில்தான் எத்தனை பேருக்கு விஞ்ஞானத்தின் மகிமையைப்

★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

பற்றித் தெரியும்? அப்படித் தெரிந்திருந்தால் சமீபத்தில் கிணற்றில் விழுந்த ஒருவரைக் காப்பாற்றப் போன மற்றவர்கள் ''மீதேன்'' வாயுவை சுவாசித்து இறந்து போயிருக்க மாட் டார்கள். பட்டாசுக் கடையில் நடந்த கோரச் சம்பவம் தடுக்கப்பட்டிருக்கும். நாலைந்து கார்பன் - டை - ஆக்ஸைடு தியணைப் புக் கருவிகளை அந்தப் பட்டாசுக் கடைகளில் வைத்திருந்திருப்பார்கள்.

சென்னை—24<br>
15–11–69 கே. எஸ். பாலகோபால்

★

'வீட்டில் பாம்புகளை வளர்ப்பது எப்படி?' என்பதைப் பற்றி 9–11–69 கல்கி இதழில் திரு பி. ஜே. தேவடாஸ் அவர்கள் எழுதியுள்ள குறிப்புக்களைப் படித்தேன். மிகவும் பயன் தரத்தக்க யோசனைகள்தான். ஆனால் அவற்றைப் பின்பற்றுவோருக்கு ஒன்றே ஒன்றுதான் தேவை: அதுதான் துணிச்சல்! அது எங்கு கிடைக்கும் என்று கூறவும்.

சிவகங்கை,<br>
8–11–69 நாகராஜன்

★

''நாற்றெட்டுத் திவ்ய க்ஷேத்திரங்கள்'' எனும் தலைப்பில் நூல் ஒன்றை சென்னை விட்டில் பிளவர் கம்பெனி ('லிப்கோ') பல ஆண்டுகளாகப் பக்தியுடன் தயாரித்து வரு கிறது. இந்த 108க்குள் அடங்காத வேறு பிரசித்தமான விஷ்ணு கோயில்களும் இப் புண்ணிய பாரத பூமியெங்கும் நன்முத்துக்கள் போன்று சிதறிக் கிடக்கின்றன. இவையும் பக்தர்களுக்குப் பிரியமான க்ஷேத்திரங்களே.

இப்படிப்பட்ட எல்லா விஷ்ணு கோயில் களைப் பற்றிய அபூர்வமான விவரங்களை ஆஸ்திக அன்பர்கள் 'லிப்கோ'வுக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அந்தந்த க்ஷேத்திர மகிமை, பாஞ்சராத்ரமா? வைகானஸமா? முக்ய உற்சவங்கள், விக்ரகங் களின் போட்டோக்கள், ஸ்தல புராணங்களி லிருந்து சிறப்பான பகுதிகள் போன்றவற்றை ஆஸ்திக அன்பர்கள் இலவசமாய் மன முவந்து அளித்து, பகவானின் பாதார விந்தங்களில் சமர்ப்பிப்பதற்கான காணிக்கை யாக இப்புத்தகம் தகுதி பெறுவதற்கு உதவி புரியுமாறும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

பகவத் அனுக்ரஹத்தால் சிறிது கால மாகவே 'லிப்கோ' ஸ்ரீ சடாரி இல்லாத அல்லது பழுதுபட்டிருக்கும் ஸ்ரீசடாரிக்குப் பதிலாகத் தாமிரத்தில் செய்த ஸ்ரீசடாரிகளை விஷ்ணு கோயில்கட்கு இலவசமாக ஸமர்ப் பித்து வருகிறது. இவ்வாறு ஸ்ரீசடாரி தேவைப்படும் சந்நிதிகள், விவரங்களுக்கு ''லிப்கோ''விற்கு எழுதலாம். முகவரி: ''லிப்கோ'', சென்னை—17.

17–11–69<br>
சென்னை—17 டி.என். வி. வரதன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon